தீபாவளி வாழ்த்துக்கள்

# கொலம்பியா





கானரத்ன

V.V. சடகோபன் B.A.

GE-6381
நடமாடி...
காம்போதி - 2 பாகங்கள்

M.L. வஸந்தகுமாரி

GE-6394 :
ஏவரமடுத்தரா...
கல்யாணி - 2 பாகங்கள்

வேணுகானம் T.K. ராதாகிருஷ்ணன்

GE-6410 பாலின் சுடத்...
காம்போதி - 2 பாகங்கள்



ஸரஸ்வதி ஸ்டோர்ஸ், மதராஸ். 2.

மேற்கண்ட ரிகார்டுகள் எங்களிடமும் கிடைக்கும்

மெஸர்ஸ். குப்தா கார்ப்பொரேஷன்

தபால் பெட்டி நெ. 35, 17-A/428, அருணாசல ஆச்சாரி தெரு, சேலம்



Policy
WORLD WIDE POLICY
NO.558

# அவர்கள் அதிர்ஷ்டம் நிறைவேறியது—

## பணத்தாலல்ல!











# க ஞ் ச ன்

நடிகர்கள்

S.V. சுப்பையா . . .
M.N. நம்பியார் . .
P.V. நரசிம்ம பாரதி
M.K. முஸ்தபா . . .
M.S.S. பாக்கியம் .
T.R. மாலதி . . . .
T.G. கமலாதேவி

டைரக்‌ஷன்:

C.A. அய்யாமுத்து, T.R. கோபு

## தீபாவளி ரிலீஸ்

மதுரை, ராமநாதபுரம், திருநெல்வேலி ஜில்லாக்கள்
புதுக்கோட்டை சமஸ்தானம், விநியோக உரிமையாளர்கள்:
ராயல் டாக்கி டிஸ்ட்ரிப்யூட்டர்ஸ் மதுரை



## ஜூபிடர் பிக்சர்ஸ் சர்க்யூட்

மதுரை & திருப்பூர்

சுதந்திர இந்தியாவின் முதலாவதாண்டு

# தீபாவளியை முன்னிட்டு

## எங்கள் சொந்தப் பார்வையில் தயாரித்த

பட்டு, நூல் சேலை, சித்தாடை, வேஷ்டி, அங்கவஸ்திரம், ஜாக்கெட், சட்டை துணிகளும் நவநாகரீகமான ரெடிமேட் ஆடைகளும் பலவூர்களிலிருந்து கண் கவரும் வர்ணங்களில் விலைகள் மலிவாக வும் ஏராளமாகத் தருவித்திருக்கிறோம்.

★

தீபாவளி மரியாதைப் பரிசளிப்பிற்கும் தினசரி உபயோகத்திற்கும் ஏற்றவாறு ஜவுளிகள் மனதிற்குகந்தபடி கிடைக்கும்

★

உங்கள் தேவைக்கு எங்களிடம்
முதலில் வந்து பாருங்கள் :

# மயிலை சில்க் ஸ்டோர்ஸ்

**வடக்கு மாடவீதி, மயிலாப்பூர், மதராஸ்**

## தீபாவளி தினம் முதல்



பக்ஷிராஜாவின்

# கன்னிகா

டைரக்ஷன்... ஸ்ரீராமுலு நாயுடு

## சென்னை..... பிரபாத்

| | | |
|---|---|---|
| மதுரை | — | சிந்தாமணி |
| கோயம்புத்தூர் | — | ராஜா |
| | | டயமண்ட் |
| திருச்சி | — | வெலிங்டன் |
| பெங்களூர் | — | ஸ்வஸ்திக் |
| | | லக்ஷ்மி |
| மைசூர் | — | ஸ்ரீ கணேஷ் |
| கும்பகோணம் | — | டயமண்ட் |
| தஞ்சாவூர் | — | டவர் |
| விருதுநகர் | — | ராதா |
| வேலூர் | — | டாஜ் |
| காஞ்சீவரம் | — | ராஜா |
| புதுச்சேரி | — | நியூகமர்ஷியல் |





NARAYANAN Co
*Release..*

# கல்கி

## பொருளடக்கம்

மலர் 7 இதழ் 15 | நவம்பர் 9 | சர்வசித்து ஐப்பசி 24





இந்தப் பழம் பெரும் பாரத நாட்டுக்கு இன்றையதினம் பெரும் அபாயம் நேர்ந்திருக்கிறது. முதன் முதலாக அந்த அபாயம் அழகிய காஷ்மீரத்தில் தலைகாட்டியிருக்கிறது. அத்தகைய அபாயம் முந்நூறு வருஷங்களுக்கு முன்னும் பாரத நாட்டின் பற்பல பகுதிகளிலும் தோன்றியிருந்தது. இன்று நம் பாரத பூமியைப் பாதுகாக்கப் பண்டித ஜவாஹர்லால் துவஜம் கட்டி நிற்பதுபோல் அன்று சத்ரபதி சிவாஜி என்னும் மகாவீரர் தோன்றினார். மத வெறியர்களின் கொடுமையிலிருந்து பாரத மக்களைப் பாதுகாத்தார்; தர்ம ராஜ்யத்தை ஸ்தாபனம் செய்தார்.




அந்த மகா வீரர் சிவாஜி தமது சேனா வீரர்களைப் பார்த்துச் சொல்லியதாக நம் மகா கவி பாரதியார் அற்புதமாக நீண்ட பனுவல் ஒன்று பாடியிருக்கிறார்.

"பாரத பூமி பழம்பெரும் பூமி
நீரதன் புதல்வர்: இந் நினைவகற் றாதீர்!"

என்று பல விதமாகவும் பாரத மக்களின் பெருமையை நினைவூட்டிய சத்ரபதி சிவாஜி. "கோழைகளும் சுகபோகங்களில் விருப்பமுள்ளவர்களும் நாட்டை விட்டுப் போய் விடுங்கள்!" என்று எச்சரித்தார்.

"ஆரிய ரிருமின்; ஆண்களிங் கிருமின்!
வீரிய மிகுந்த மேன்மையோர் இருமின்!
ஊரவர் துயரில் நெஞ்சு உருகுவீர் இருமின்!
வாழ்வுமேற் பாரத வான்புகழ்த் தேவியைத்
தாழ்வினின் றுயர்த்திய தடம்புகழ் பெறுவோம்!"

என்றெல்லாம் கூறிச் சத்ரபதி சிவாஜி தம் சேனையிலுள்ளவர்களை மகா வீர புருஷர்களாக்கினார்.

மேற்கூறிய அற்புதமான பாடல் நமது அட்டையிலுள்ளது போன்ற படங்களுடன் "பாரதி நினைவு மலர்" என்ற நூலில் வெளியாகியிருக்கிறது. இந்தக் கவிதை மலரை ஒவ்வொரு தமிழ் மகனும் படிக்கவேண்டும்; இச்சமயம் அவசியம் படிக்க வேண்டும்.

# வெள்ளிமணி
# தீபாவளி மலர் 1947

**தீபாவளி மங்கள தினத்தன்று**
**எங்கும் கிடைக்கும்**



## விலை ரூபாய் நாலு

(தபாற் செலவு அணா எட்டு)



ராஜாஜி, டி. கே. சி., நாமக்கல் கவிஞர், கல்கி
முதலிய பல அறிஞர்களுடைய கட்டுரைகளும்,
கண்ணைக் கவரும் மூவர்ண ஓவியங்களும் மலரை
அழகு படுத்துகின்றன.



முன் பணம் அனுப்பி இப்பொழுதே
உங்கள் பிரதிக்கு ரிஜிஸ்தர்
செய்து கொள்ளுங்கள்.



மானேஜர் :

**வெள்ளி மணி**

தியாகராய நகர் :: சென்னை




மலர் 7 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 15

# என்ன சேதி?

## பொங்கல் பொன் மலர்

நாளது சர்வஜித்து ஆண்டில் தமிழ் மக்கள் அனைவரும் ஆனந்தமாகக் கொண்டாடும் பொங்கல் பண்டிகையின்போது "கல்கி"யின் பொங்கல் மலர் அழகிய பொன் மலராக வெளியாகி மணம் வீசும் என்னும் செய்தியை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

இந்த வருஷத்துக் "கல்கி" தீபாவளி மலர் சம்பந்தமாக ஆயிரக் கணக்கான நேயர்கள் கடிதம் மூலமாகவும் தந்தி மூலமாகவும் டெலிபோன் மூலமாகவும் விசாரித்துக் கொண்டிருந்தார்கள். நாளாக ஆக, "தீபாவளி மலர் உண்டா இல்லையா?" என்று கேட்கத் தொடங்கினார்கள். நேயர்களின் கோபத்துக்கு ஆளாவதற்குத் தயங்கி இத்தனை நாளும் மேற்படி கேள்விக்குப் பதில் சொல்வதைத் தள்ளிப் போட்டுக்கொண்டே வந்தோம். இனிமேல் தள்ளிப்போடத் தேதி இல்லையாகையால் இந்த இதழில் அவசியம் பதில் சொல்லித் தீர வேண்டியதாகி விட்டது. எனவே, "உப்பு இருக்கிறதா?" என்றால், "சர்க்கரை இருக்கிறது" என்று பதில் சொல்லும் சம்பிரதாயத்தை அனுசரித்து "இவ்வருஷம் 'கல்கி' பொங்கல் மலர் உண்டு" என்று தெரியப்படுத்துகிறோம்.

இவ்வருஷம் "தீபாவளி மலர்" வெளியிட முடியாததின் காரணத்தை நேயர்கள் ஊகித்தறியக் கூடும். "கல்கி"ப் பத்திரிகை நிர்வாகி பாரதி மண்டபத் திருப்பணி முயற்சியில் ஈடுபட்டிருந்ததுதான் காரணம். இவ்வருஷம் விசேஷ மலர் கொண்டு வருவதையே நிறுத்திவிடலாம் என்று முதலில் கருதினோம். அவ்விதம் செய்தால் தமிழ் மக்களுடைய தீவிரமான கோபத்துக்கு ஆளாக நேரலாம் என்று நேயர்களின் கடிதங்களிலிருந்து தெரிய வந்தது. எனவே, தமிழ் நாட்டில் தீபாவளிக்கு இணையான மற்றொரு பண்டிகையான பொங்கல் திருநாளில் விசேஷ மலரை வெளியிடுவது என்று முடிவு செய்து வேலையும் ஆரம்பமாகி விட்டது. வழக்கத்தைக் காட்டிலும் இரண்டு மாதம் கழித்து நமது விசேஷ மலர் இவ்வாண்டில் வெளியாகிறபடியால், அவ்வளவுக்கு மலர் அதிக சிறப்புடன் விளங்கும் என்று நேயர்கள் எதிர்பார்க்கலாம்.

## கவர்னர் ஜெனரல் ராஜாஜி

சில தினங்கள் ராஜாஜி இந்தியாவின் கவர்னர் ஜெனரல் பதவி வகிக்கப்போகிறார். முதன் முதலாக இந்தப் பதவியை வகிக்கப் போகும் இந்தியர் ராஜாஜி அவர்கள்தான். ஆனால் இது விஷயமாக நாம் பிரமாத மகிழ்ச்சி அடையவும் இல்லை; அதிசயப் படவும் இல்லை. ராஜாஜி கவர்னர் ஜெனரல் பதவி வகிப்பதால் அந்தப் பதவியின் கௌரவம் அதிகமாகி விடுகிறது. எனவே, கவர்னர் ஜெனரல் பதவி தனக்கு இத்தகைய அதிர்ஷ்டம் கிட்டியது பற்றி மகிழ்ச்சி அடைய வேண்டும். வட நாட்டுத் தலைவர்கள் நமது தமிழர் தலைவருக்கு இந்தகைய மதிப்பு அளிக்கிறார்களே என்பது பற்றி நாம் ஓரளவு மகிழ்ச்சி அடையலாம். ஆனால் அதிசயப்படுவதற்கு அவ்வளவு காரணம்கூட இல்லையல்லவா? கங்கை நதியில் பெரும் பிரவாகம் வந்தது என்றால் அதில் அதிசயம் என்ன? இயற்கைதானே?

## ராஜாஜி ஜன்ம தினம்

ராஜாஜியின் பிறந்த தினத்தைக் குறித்துக் "கல்கி" இதழில் ஒரு கட்டுரை வெளியாயிற்று. அது முதல் மேற்படி பிறந்த தினத்தைக் கண்டு பிடிக்கும் முயற்சியில் பலர் ஈடுபட்டார்கள். பலரும் நமக்கு எழுதினார்கள். கடைசியாக, பஹுதான்ய வருஷம் மார்கழி மாதம்

புனர்வசு நட்சத்திரம் கூடிய சுப தினத்தில் ராஜாஜி பிறந்தார் என்று நிச்சயமாயிற்று. இதன்படி 1947ம் வருஷம் டிசம்பர் 29ஆ ராஜாஜியின் 70-வது பிறந்த தினம் வருகிறது. நம் நாட்டுப் பெரியோர்களைப் போற்றும் குணம் தமிழர்களிடையே எவ்வளவு தூரம் வளர்ந்திருக்கிறது என்பது அன்றைய தினம் வெளியாகும்.

## சட்ட சபையில் தூங்கலாமா?

சட்ட சபையில் அங்கத்தினர்கள் தூங்கலாமா? தூங்காமல் கண்களை மாத்திரம் மூடிக்கொண்டிருப்பது குற்றமா? கண்களைத் திறந்துகொண்டே ஆழ்ந்த தூக்கத்தில் ஈடுபடுவோர் விஷயமாக என்ன நடவடிக்கை எடுத்துக் கொள்ளுவது?—இவை போன்ற பல குதூகலமான கேள்விகள் சென்ற வாரம் சென்னை அசெம்பிளிக் கூட்டத்தில் எழுந்தன. சபையில் ஓர் அங்கத்தினர் தூங்கிக் கொண்டிருந்ததன் விளைவாகவே சில அங்கத்தினர்கள் அவ்வாறு சரமாரியாகக் கேள்விகளைத் தொடுத்தனர். பார்லிமெண்டுகளுக்கெல்லாம் நாயகமான பிரிட்டிஷ் பார்லிமெண்டில்கூட அங்கத்தினர்கள் தூங்குவது அனுமதிக்கப்பட்டிருக்கும்போது, சென்னை சட்ட சபையில் மாத்திரம் அங்கத்தினர்கள் தூங்குவதற்கு ஆட்சேபணை என்ன என்ற ஒரு கேள்வியும் எழுந்தது.

ஆனால், மேற்படி விஷயத்தில் சபாநாயகர் பிரிட்டிஷ் பார்லிமெண்டின் சம்பிரதாயத்தைப் பின்பற்றத் தயாராயில்லை. "தூங்க வேண்டும்போலிருந்தால் கண்களை மூடிக்கொள்ளுங்கள். அதில் எனக்கு ஆட்சேபணையில்லை. ஆனால், தூங்குவதை நான் அனுமதிக்க முடியாது. அதை அனுமதித்தால், பிறகு அங்கத்தினர்கள் குறட்டை விடவும் ஆரம்பித்து விடுவார்கள்!" என்பதாகச் சபாநாயகர் தமது தீர்ப்பைக் கூறினார்.

நித்ராவஸ்தையின் மூன்று நிலைகள் இவைதான்; முதலில் கண்களை மூடிக்கொள்ளுதல், இரண்டாவதாகத் தூங்குதல், மூன்றாவதாகக் குறட்டை விடுதல்! இவற்றில் முதலாவது நிலையை மாத்திரமே சபாநாயகர் அனுமதித்திருக்கிறார். இதிலும் ஒரு சிக்கல் இருக்கத்தான் செய்கிறது. ஒருவர் தூங்காமல் கண்களை மாத்திரம் மூடிக் கொண்டிருக்கிறார், அல்லது தூங்குகிறார் என்பதை எவ்வாறு நிர்ணயிப்பது?

சென்னை சட்ட சபையில் நிகழ்ந்த மேற்படி சம்பவத்தைக் குறித்து 'அமிர்த பஜார்' போன்ற பிரபலப் பத்திரிகைகள் தலையங்கங்கள் எழுதியிருக்கின்றன. அங்கத்தினர்கள் சபையில் தூங்கக் கூடாதென்றும் குறட்டை விடக்கூடாதென்றும் சென்னை சபாநாயகர் கூறிவிட்டதால், அவர் தங்களுடைய உரிமைகளிலும் சுதந்திரத்திலும் தலையிட்டு விட்டதாக மேற்படி அங்கத்தினர்கள் கருதக்கூடும். அவர்கள் குறட்டை விடும் சட்ட சபை அங்கத்தினர்களடங்கிய அகில இந்திய சங்கமொன்றை ஆரம்பித்து, தங்களுடைய 'உரிமை'யை ஸ்தாபிப்பதற்காகப் போராடலாம் என்று 'அமிர்த பஜார்' பத்திரிகை ஒரு யோசனை கூறுகிறது. அருமையான யோசனை!

## ஜமீனில் ஜனநாயகம்

எட்டயபுரம் சமஸ்தான மகாராஜாவின் பிறந்த தினம் அக்டோபர் 29ஆ மேற்படி ஜமீனில் கொண்டாடப்பட்டது. அன்று எட்டயபுரம் மகாராஜா ஓர் அருமையான ஜனநாயகத் திட்டத்தை வெளியிட்டார். எட்டயபுரம் ஜமீனில் உள்ள ஒவ்வொரு வட்டாரத்துக்கும் ஒவ்வொரு பிரதிநிதி வீதம் பொதுஜனப் பிரதிநிதிகள் அடங்கிய சபை ஒன்றை ஸ்தாபித்து, மேற்படி பிரதிநிதி சபையாரின் ஆலோசனைகளை யனுசரித்து ஜமீன் காரியங்களை நிர்வகிப்பது என்பது திட்டத்தின் சாராம்சம். காலப் போக்கை யொட்டி எட்டயபுரம் மகாராஜா தமது ஜமீனில் இத்தகைய சீர்திருத்தத் திட்டத்தை அமுலுக்குக் கொண்டு வருவது குறித்து மகிழ்ச்சியடைகிறோம்.

## வின்ஸ்டன் சர்ச்சிலின் விநோதக் கனவு

பிரிட்டிஷ் முனிசிபல் தேர்தல்களில் கன்சர்வேடிவ் கட்சிக்கு எதிர்பாராத வெற்றி கிடைத்திருப்பதால், தகர்ந்து போன பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தைத் தமது பிரசங்க வித்தையால் மீண்டும் கட்டி வைத்து உருவாக்கலாம் என்ற சிந்தனையில் சர்ச்சில் ஆழ்ந்து கிடக்கிறார்.




## குமாஸ்தாக்களுக்கும் கதி மோக்ஷம்!




கடைகள் முதலிய ஸ்தாபனங்களில் வேலை செய்யும் குமாஸ்தாக்களுக்கும் சிப்பந்திகளுக்கும் கூட வருஷத்தில் 36 நாட்கள் லீவு கொடுக்க வேண்டுமென்ற மசோதா சென்னை அசெம்பிளியில் நிறைவேறியிருக்கிறது. இச் செய்தியைக் கேட்ட குமாஸ்தாக்களின் குஷியைக் கேட்கவா வேண்டும்?

- சாஸ்திரி


1 வகுப்பு வெறியால் அல்லல்பட்ட அகதிகள் கடுங்-குளிரால் கஷ்டப் படாமலிருக்க இந்திய சர்க்கார் அவர்களுக்குக் கம்பளங்கள் கொடுத்தும்,
இந்திய சர்க்கார்


2 முப்பெரும் வல்லரசுகள் அரசியல் ஆதிக்க ஆசையால் உலகத்தை ஆட்டி வைத்தும்,
பெவின்
ஸ்டாலின்


3 அடுப்பு எரிப்பதற்குக் கரியின்றி பிரிட்டிஷ் சர்க்கார் சங்கடப் பட்டும்,
சமையலறை


4 காஷ்மீரில் படை யெடுத்துள்ள கொள்ளைக்காரர்கள் வீடுவாசல்களைக் கொளுத்தியும்
தீபாவளி பண்டிகை கொண்டாடுகின்றனர்
இந்திய சர்க்கார்

# உழவும் தொழிலும்



ஒரு புல் முளைத்த இடத்தில் இரண்டு புல்கள் முளைக்கும்படி செய்பவனே ஜனங்களின் உண்மையான ஊழியன் என்று பிரபல ருஷ்ய ஞானி சொல்லி யிருக்கிறார்.

ஜனங்களின் க்ஷேமத்துக்கு விவசாய முன்னேற்றம் அத்தியாவசியம் என்பதையே அந்தப் பேரறிஞர் அவ்வாறு சுருங்கக் கூறி விளங்க வைத்திருக்கிறார்.

“உழவுக்கும் தொழிலுக்கும்
வந்தனை செய்வோம்”

என்று மகாகவி பாரதியார் பாடி, உழவின் உயர்வையும் தொழிலின் எழிலையும் விளக்கி யிருக்கின்றார்.

மகா ராஜாதி ராஜாக்க ளாயினும், கத்தியேந்திப் போருக்குச் செல்லும் வீரர்களாயினும், மற்றெவராயினும், அவர்களுக்கு உயிர் கொடுப்பது உழவு தான்.

அதனால்தான் அதன் மகத்துவத்தைக் கவிகளும், கர்ம யோகிகளும், ஞானிகளும் கூடப் புகழ்ந்திருக்கிறார்கள்.

பயிரை வளர்ப்பவனே உயிரை வளர்ப்பவன் என்பது வள்ளுவ முனிவரின் திருவாக்கு.

“உழுதுண்டு வாழ்வாரே
வாழ்வார்; மற்றெல்லாந்
தொழுதுண்டு பின்செல்பவர்”

இன்றைய உலக நிலைமையைப் பளிச்சென்று எடுத்துக்காட்ட மேற்படி ஒரு வாக்கியமே போதும்.

உழவின் பலனை உணவுப் பொருள்களுக்காக இப்போது பல பெரிய நாடுகளும் பிறரை யாசிக்கும்படியான நிலைமை ஏற்பட்டிருக்கிறதல்லவா?

உழவை, அதாவது விவசாயத்தை அலட்சியம் செய்யும் நாடு உண்மையான சுதந்திரம் பெற்றதாகாது என்பதும் இப்போது நிதர்சனமாகி வருகிறது.

ஆம், சுதந்திர மிருந்தும் சுபிட்ச மின்றேல், சுதந்திரத்தின் அருமையை எவ்வாறு அனுபவிக்க முடியும்?

இவ் வாரத்தில் நிகழ்ந்த சர்வ தேசத் தொழிலாளர் ஸ்தாபனத்தின் ஆசியா பிரிவு மகாநாட்டில், பண்டித ஜவாஹர் லால் நேரு மேற்படி உண்மையை வலியுறுத்தி யிருப்பது குறிப்பிடத் தக்கதாகும்.

* * *

ஆசியா நாடுகள் சம்பந்தப்பட்ட மட்டில் விவசாயம் பெருக வேண்டும். விவசாயிகளின் நிலையும், மற்றும் சகல தொழிலாளர்களின் நிலையும் உயர வேண்டும். தொத்து வியாதியைப் போல் வறுமைப் பிணியும் மானிட சமுதாயத்துக்கு மகத்தான ஆபத்தை விளைவிப்பதாகும். எனவே, அந்தப் பிணியை ஒழிக்க வேண்டும். பொதுவாகத் தொழிலாளர்களின் வாழ்க்கை சீர்பட வேண்டும்.

தொழிலாளர்களின் கஷ்டங்கள் தீர்ந்தால்தான் உழவும் தொழிலும் உயர்வடையும்.

உழவும் தொழிலும் உயர்வடைந்தால்தான் தேசம் சுபிட்ச மடையும்.

தேசம் சுபிட்ச மடைந்தால்தான் பெற்ற சுதந்திரத்துக்குப் பலன் கிடைத்ததாகும்.

இவைபோன்ற பல முக்கிய சீர்திருத்தங்களுக்கும் மேற்படி தொழிலாளர் மகாநாடு அடிகோலி யிருக்கிறது.

அதன் பெயர் ‘தொழிலாளர் மகாநாடு’ என்றாலும், அதில் ஆசியாவையும் பசிபிக் பிரதேசத்தையும் சேர்ந்த இருபது நாடுகளின் தொழிலாளர்கள், முதலாளிகள், சர்க்கார்கள் இவர்களின் பிரதிநிதிகள் கலந்து கொண்டிருப்பது ஒரு விசேஷமான அம்சமாகும்.

சர்வதேசத் தொழிலாளர் ஸ்தாபனம் உருக் குலைந்து போகாமல் இருந்ததற்கே அந்த அம்சம்தான் காரணம்.

* * *

முதலாவது மகா யுத்தத்துக்குப் பின் ஆரம்பமான சர்வதேசச் சங்கம் தேய்ந்து மறைந்ததற்குக் காரணம், அதில் அங்கம் வகித்த நாடுகளின் மண்ணாசையும், கட்சிப் பிரதிகட்சிகளுமே.

ஆனால், அத்தகைய புல்லுருவி சர்வ தேசத் தொழிலாளர் ஸ்தாபனத்தில் படரவில்லை.

அந்த ஸ்தாபனம், உண்மையாகவே தொழிலாளர்களின் க்ஷேமத்துக்காக ஓரளவு உழைக்க முற்பட்டது.

அதன் முயற்சிகளுக்குச் சில நாடுகளைச் சேர்ந்த சர்க்கார்கள் முட்டுக்கட்டைபோட விரும்பவில்லை; மற்றும் சில நாடுகளைச் சேர்ந்த சர்க்கார்களால் முட்டுக்கட்டைபோட முடியவில்லை.

சிறந்த நோக்கங்களைக் கொண்ட சர்வதேச ஸ்தாபனமானதால், முதலாளிகளும் அதனுடன் ஓரளவாவது ஒத்துழைக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது.

அவ்வாறாக, தொழிலாளர்களும், முதலாளிகளும், சர்க்கார்களும் அந்த ஸ்தாபன அலுவல்களில் கலந்து கொண்டிருந்ததாலும், அதில் மண்ணாசைக்கும் அரசியல் போட்டா போட்டிக்கும் இடமில்லையாதலாலும், அது இதுவரையில் தொழிலாளர்களின் நன்மைக்கான பல காரியங்களை நிறைவேற்றியிருக்கிறது.

எனவே, அத்தகைய ஒரு சர்வதேச ஸ்தாபனத்தின் ஆசியா பிரிவு மகாநாடு முதன் முதலாகச் சுதந்திர இந்தியாவில் நடந்திருப்பது முற்றிலும் பொருத்தமாகும்.

ஏனெனில், மேற்படி ஸ்தாபனம் என்று ஆரம்பமாயிற்றோ அன்றிருந்து, அதாவது சென்ற இருபத்தெட்டு வருஷங்களாக இந்தியா அதில் அங்கம் வகித்து வருகிறது. அந்த ஸ்தாபன நிர்வாக நிதிக்கு அதிகத் தொகை கொடுப்பதில் உலகிலே இந்தியா மூன்றாவது ஸ்தானம் வகிக்கிறது. தொழிலாளர்களுக்கு ஆபத்து நேர்ந்தால் முதலாளிகளோ, சர்க்காரோ நஷ்டஈடு கொடுக்க வேண்டுமென்ற சர்வதேசச் சட்டத்தை முதன் முதலாக அமுலுக்குக் கொண்டு வந்து ஆசியாவிலுள்ள மற்ற தேசங்களுக்கு வழிகாட்டியதும் இந்தியாவே.

சர்வதேசத் தொழிலாளர் ஸ்தாபனம் வகுத்த மற்றும் பல விதிகளையும் இந்தியா சிரத்தையுடன் அனுஷ்டானத்தில் கொண்டு வந்திருக்கிறது.

இச்சந்தர்ப்பத்தில் மற்றொரு முக்கிய விஷயத்தை — உலகத்தில் ஏற்பட்டுள்ள ஒரு முக்கிய மாறுதலைக் குறிப்பிட வேண்டியது அவசியமாகும்.

இதற்கு முன் ஒரு சர்வ தேச மகாநாடுகூட ஆசியாவில் நடந்ததில்லை. ஆசியாவிலுள்ள பல நாடுகளும் ஐரோப்பிய சாம்ராஜ்யங்களின் காலனிகளாக இருந்ததே அதற்குக் காரணம்.

ஆனால், இப்போதோ ஆசியா, காலனி முறையையே குழி தோண்டிப் புதைக்கக் கங்கணம் கட்டிக்கொண்டுவிட்டது.

இனி ஆசியா நாடுகளின் ஒத்துழைப்பின்றி எந்த சர்வ தேச ஸ்தாபனமும் உருப்பட முடியாதென்பதை, உலகிலுள்ள இதர நாடுகள் உணர்ந்து கொண்டிருக்கின்றன.

* * *

மேற்படி சர்வ தேச ஸ்தாபனத்தின் பொறுப்புகளை ஆசியா நாடுகள் நிறைவேற்றி வந்துள்ளன. ஆனால், ஆசியா நாடுகளின் க்ஷேமத்தில் அச்சங்கம் சிரத்தை கொள்ளாதது அந்த ஸ்தாபனத்தின் ஒரு பெருங் குறையாகும்.

அதற்கும் காரணம் ஆசியா நாடுகளின் அரசியல் துர்ப்பாக்கியமே.

ஐரோப்பியத் தொழிலாளர் பிரச்னைகளிலேயே மேற்படி ஸ்தாபனம் கவனம் செலுத்தி வந்ததால், ஆசியாவிலுள்ள தொழிலாளர்களில் ஒன்றுக்குப் பத்து அல்லது இருபது விகிதம் அதிகமாக உள்ள பெரும்பாலோரான விவசாயிகளின் நிலைமை அணுவளவும் சீர்திருந்தவில்லை.

சர்வதேசத் தொழிலாளர் ஸ்தாபனத்தின் முயற்சியால் தொழிற்சாலைகளில் வேலை செய்யும் தொழிலாளர்களுக்குச் சில வாழ்க்கை வசதிகள் கிடைத்துள்ளன என்பது உண்மையே. ஆனால், ஆசியா நாடுகளிலுள்ள பெரும்பான்மையோரான கோடானு கோடி விவசாயத் தொழிலாளர்களின் நிலைமை என்னவென்பதே இப்போது கேள்வியாகும்.

ஆசியாவிலுள்ள விவசாயிகளின் நிலைமை முன்னேற்றமடைந்திருந்தால், — ஆசியாவில் முன்னேற்றகரமான வேளாண்மை முறைகள் கைக்கொள்ளப்பட்டிருந்தால், இன்று ஆசியா, உணவுப் பொருள்களுக்குப் பிறநாடுகளை எதிர்பார்க்க வேண்டிய அவசியமே ஏற்பட்டிராது.

எந்தத் தேசமாயினும் உணவுக்குப் பிற நாடுகளை எதிர்பார்ப்பது ஆபத்தாகுமென்பதை, இரண்டாவது மகாயுத்தமானது அகில உலகமும் அறிந்து கொள்ளும்படி செய்திருக்கிறது.

எனவே, இப்போது நடந்துள்ள ஆசியா தொழிலாளர் மகாநாட்டின் பலனாக மேற்படி விபரீதமான நிலைமைக்கு ஏதாவது பரிகாரம் ஏற்படுமென நினைக்கிறோம்.

* * *

அம்மகாநாட்டுக்கு விஜயம் செய்த சீனப் பிரதிநிதி குறிப்பிட்டதுபோல, உலக ஜனத்தொகையில் பாதிக்குமேல் ஆசியாவில் இருக்கின்றனர். அவர்களில் எழுபத்தைந்து சத விகிதப் பேர்கள் உழுதுண்டு வாழ்வோராவர்.

அப்படியிருக்க, எந்தச் சர்வ தேச ஸ்தாபனமும், அதிலும் குறிப்பாகச் சர்வதேசத் தொழிலாளர் ஸ்தாபனம் ஆசியாவையோ, ஆசியத் தொழிலாளர் பிரச்னைகளையோ ஒதுக்கி வைத்துவிட்டு எதுவும் செய்ய முடியாது.

உலகத்திலுள்ள பாதி ஜனங்கள் துன்பப்படும்போது, உலகில் அமைதி நிலவுவது எவ்வாறு சாத்தியமாகும்?

எனவே, இனியாவது ஆசியாவிலுள்ள விவசாயிகளின் முன்னேற்றம் ஒன்றையே லட்சியமாகக் கொண்ட கட்டுக்கோப்பான ஸ்தாபனம் ஏற்பட வேண்டியது அவசியமாகும்.

அத்தகைய ஸ்தாபனம் எதுவும் இப்போது இல்லாததால்தான், விவசாயிகளின் கிளர்ச்சி ஒவ்வோரிடத்தில் ஒவ்வொரு விதமாக இருந்து வருகிறது.

எனினும் அதைக் குறித்து ஆச்சரியப்படுவதற்கில்லை.

ஏனெனில், இன்று உலகிலுள்ள எந்த தேசத்தில்தான் தொழிலாளர்—முதலாளிகள் தகராறுகளும் வேலை நிறுத்தங்களும் இல்லாமலிருக்கின்றன?

தொழிலாளர்களின் ஸ்தாபனம் சிறந்த முறையில் வேலை செய்யும் ஐரோப்பிய, அமெரிக்க தேசங்களில் கூட தினசரி ஏதாவதோரிடத்தில் வேலை நிறுத்தம் நிகழ்ந்த வண்ணமாக இருக்கிறது.

அதற்குக் காரணம் மகத்தான யுத்தத்துக்குப் பின் ஏற்படும் தவிர்க்க முடியாத பொருளாதார நெருக்கடிதான்.

அந்த நெருக்கடியாகிற வியாதிதான் இப்போது இந்தியாவையும் ஆட்டி வைத்து வருகிறது.

அமெரிக்கா, கனடா, ஆப்பிரிக்கா, ஆஸ்திரேலியா போன்ற நாடுகளின் அபரிமிதமான உதவியைப் பெற்று வரும் பிரிட்டன்கூட தற்போதைய பொருளாதார நெருக்கடியால் திணறி வருகிறது.

அப்படியிருக்க, பல பல வருஷங்களாகப் பிறநாட்டினரால் சுரண்டப்பட்டு, புதிதாக சுதந்திரமடைந்து, பல்வேறு பிரச்னைகளையும் உடனடியாகச் சமாளிக்கும்படியான சங்கடத்தில் சிக்கியுள்ள பாரதநாடு. அத்தகைய நெருக்கடியைச் சமாளிப்பது எவ்வளவு கஷ்டமான காரியம்?

எந்தச் சக்தியினாலும் தடுக்க முடியாத இந்த நெருக்கடியான சமயத்தில், வேலை நிறுத்தங்கள், கதவடைப்புகள் போன்ற புதிய பிரச்னைகளைச் சிருஷ்டிப்பது கூடாதென்றும், அவ்வாறு சிருஷ்டிப்பதால் உற்பத்தி குறைந்து நெருக்கடி இன்னும் அதிகமாகுமென்றும் மேற்படி மகாநாட்டில் ஜவாஹர்லால்ஜி குறிப்பிட்டிருக்கிறார்.

கொஞ்ச காலத்துக்கு வேலை நிறுத்தம் அல்லது கதவடைப்பு என்பதே ஏற்படக்கூடாதென்றும், தொழிலாளர் தகராறு எதுவாயினும் அது மத்தியஸ்தத்தின் மூலம் சமரசமாகவே தீர்க்கப்படவேண்டுமென்றும் நமது மாபெருந்தலைவர் குறிப்பிட்டிருப்பதைத் தொழிலாளர்களும் சரி, முதலாளிகளும் சரி, கவனிக்க வேண்டும்.

* * *

யுத்த காலத்தில் விரோதிகளிடமிருந்து தங்கள் தேசத்தைக் காக்கும் விஷயத்தில் சிப்பாய்கள் முதல் ஸ்தானம் வகிப்பதுபோல், சமாதான காலத்திலும் பொருளாதார நெருக்கடியாகிற கொடிய விரோதியிடமிருந்து தங்களுடைய தேசத்தைப் பாதுகாக்க வேண்டிய முழுமுதற் கடமை தொழிலாளர்களைச் சார்ந்ததாகிறது.

எனவே, சிப்பாய்களிடை நிலவ வேண்டிய ஒழுங்கும் தேசபக்தியும் தியாக சிந்தையும் தொழிலாளர்களிடையே நிலவ வேண்டுமென்று கூறுவது மிகையாகாது.

தொழிலாளர்கள் தங்களுடைய கடமைகளை உணர்ந்து நடந்து கொள்ளும் பட்சத்தில், பொது ஜனங்களும், உத்தம தேசபக்தர்களையும் தியாகசீலர்களையும் தலைவர்களாகக் கொண்ட இந்திய சர்க்காரும் தொழிலாளர்களைக் கைவிட மாட்டார்களென்பது உறுதி.

தொழிலாளர்களின் க்ஷேமமும் பொது ஜனங்களின் நலனும் சர்க்காரின் கடமையும் பிரிக்கமுடியாதவை.

## திருச்சியில் நாடகம்!

## 24-10-47 முதல்

தினசரி நடைபெறுகிறது

★

K. R. ராமசாமியின்
கிருஷ்ணன் நாடக சபா

## ரெத்தினவேலு தேவர் ஹாலில்

(முனிஸிபல் பப்ளிக் ஹால்)

★

ஓவிய நிபுணர் V. மாதவன்
பிள்ளை தீட்டிய புதிய சீன்
அமைப்புகளுடன்

அறிஞர் C. N. அண்ணாதுரை M. A.
எழுதிய

# "ஓர் இரவு"

தஞ்சையில் 200 நாட்கள்
தொடர்ந்து நடந்த நாடகம்

பாடல்கள்:
உடுமலை நாராயணக்கவி

தினசரி இரவு 9-30க்கு
புதன், ஞாயிறு மாலை 6-30க்கு
தீபாவளியன்று மாலை 6-30க்கு
திங்கள் நாடகம் இல்லை

★

சபை அமைப்பு: **T. P. P.** உரிமையாளர்: **K. R. R.**

நிர்வாகி: **P. V. E.**

★

டிக்கட் வரியுள்பட: ரூ. 3-8-0, 2-8-0
1-8-0, 1-0-0, 0-8-0

N. B.—காலை 10 மணி முதல் 4 மணி வரை முதல் இரண்டு வகுப்புக்கள் மட்டும் ரிசர்வ் செய்யப்படும். ரிசர்வ் கட்டணம் டிக்கட் 1-க்கு அணா 0-4-0. வெளியூர் வாசிகள் முன் பணம் அனுப்பி ரிசர்வ் செய்து கொள்ளலாம்.

M. P. பிள்ளை
Prop: S. G. சபா, கண்ட்ராக்டர்



# ஔவையார்

(By P. எதிராஜு)

டி. கே. எஸ். சகோதரர்களின்
நாடக விழா!

★

புதிய அழகிய கலையரங்கம்

## கோவை

## ஷண்முகா தியேட்டரில்

## 11-11-47

## தீபாவளி முதல்

★

"எனக்கு அதிகாரமிருந்தால் இந்த ஔவை நாடகத்தைத் தமிழ் நாட்டின் ஒவ்வொரு கிராமங்களிலும் நடத்த ஏற்பாடு செய்வேன்......"

—ஸ்ரீ. ஆர். கே. ஷண்முகம் செட்டியார்.

"தமிழ் நாட்டில் உள்ள எல்லாக் குழந்தைகளும் இந்த நாடகத்தைப் பார்த்து விடவேண்டும்... ஔவையார் நாடகம் பார்த்து அனுபவிக்க வேண்டிய கலைக்காட்சி மட்டுமல்ல; தமிழர்களின் வாழ்வையே உயர்த்தக் கூடிய நிர்மாணத் திட்டத்தைச் சேர்ந்தது........."

—கல்கி: 3-6-45

★

ஞாயிறு, புதன் மாலை 6-30
மற்ற நாட்கள் இரவு 9-30
திங்கள் விடுமுறை

வரியுள்பட கட்டணம்:
ரூ. 4-0-0, 2-12-0, 1-10-0
0-13-0, 0-6-6

1, 2, 3-வது வகுப்புகள் முன்பணமனுப்பி ரிசர்வ் செய்து கொள்ளலாம்.

டி. கே. எஸ். சகோதரர்கள்,
உரிமையாளர்கள்

# சுதந்திரத் தீபாவளி

**பகீரதன்**

ஜவுளிக் கடைகள் எல்லாம் விதம் விதமான அலங்காரத்துடன் தெருவில் நடக்கும் ஜனங்களை "வா! வா!" என்று அழைத்துக்கொண்டிருந்தன. தையல் கடைகளில் இரவு பகல் எந்த நேரமும் ஓய்ச்சல் ஒழிவின்றி மிஷின்கள் சுழன்று கொண்டிருந்தன. ஜனங்களும் ஜே, ஜே என்று போவதும் வருவதுமாகப் பரபரப்புடன் இருந்தனர். ஊரே ஒரு புது ஒளியுடன் பிரகாசித்தது. எங்கு பார்த்தாலும் மின்சார விளக்குகள் இரவைப் பகலாக்கிக் கொண்டிருந்தன.

தூரத்திலிருந்து வந்த 'பட்...பட...பட...பட்' என்ற சின்ன வெடிச் சத்தம், தீபாவளிப் பண்டிகையை நினைவூட்டி விட்டு ஓய்ந்தது. நானும் தீபாவளிக்கு என்னுடைய சொந்த கிராமமாகிய மூங்கில் தோட்டத்துக்குப் போவது என்று தீர்மானித்து விட்டேன்.

★

'ஜல், ஜல்' என்ற சலங்கைச் சத்தம், இரட்டை மாட்டு வண்டியில் என்னுடைய கிராமத்துக்குப் போவதை எனக்கு நினைவூட்டிக்கொண்டே இருந்தது. எங்கள் கிராமத்தின் எல்லையை வண்டி அடைந்ததும், நம் சொந்த ஊருக்கு வருகிறோம் என்ற ஆசையைவிட, பச்சைப் பசேலென்று கண்ணுக் கெட்டிய தூரம் தெரிந்த வயல்களும், கோயிலும் குளமும் சேர்ந்து என் மனதுக்கு ஒரு தனி இன்பத்தைக் கொடுத்தன.

எப்பொழுது வண்டி வீட்டு வாசலில் நின்றதோ தெரியாது. "வண்டாப்பா, உடம்புக்கு ஒன்றுமில்லாமல் சௌகரியமா இருக்கையா?" என்ற என் தாயாரின் குரலைக் கேட்டு, அப்படியே கீழே குதித்தேன்.

கூடத்தில் அகமும் முகமும் மலர என்னை வரவேற்றாள் என் மனைவி சரோஜா. அவளுக்குப் பிடித்தமான கனகாம்பரப் பூவை எடுத்து அவள் கையில் கொடுத்தேன். ஆவலுடன் வாங்கித் தலையில் சூட்டிக் கொண்டாள். அதைச் சூட்டிக் கொண்ட உடனேயே, ஒரு புது லாவண்யத்துடன் திகழ்ந்தாள் அவள். என்னைப் பார்த்துவிட்ட மகிழ்ச்சியினால் தானோ என்னவோ!

கூடத்தில் இருந்த ஊஞ்சலில் உட்கார்ந்தபடி அவளுடன் ஏதேதோ பேசிக் கொண்டிருந்தேன். "காப்பியைச் சாப்பிட்டுப் பேசிக் கொண்டிருக்கக் கூடாதோ?" என்ற என்னுடைய தாயாரின் குரல், வெகு நேரமாக நாங்கள் பேசிக் கொண்டிருந்து விட்டோம் என்பதைத் தெரிவித்தது.

சாப்பிட்டு விட்டுக் கொல்லைப் புறத்துத் தோட்டத்தில் போய் உட்கார்ந்து, நானும் சரோஜாவும் நேரம் போவதே தெரியாமல் பகல் பூராவும் பேசித் தீர்த்தோம். "பொழுது போய்விட்டது; நான் ஆற்றுக்குப் போய்த் தண்ணீர் கொண்டுவர வேணும்" என்று சொல்லிப் போய்விட்டாள் அவள்.

அவள் தண்ணீர் கொண்டுவரப் போகிறேன் என்று சொல்லிவிட்டுச் சென்றதும், எனக்கு முதன் முதலில் சரோஜாவைப் பார்க்கப் போன ஞாபகம் வந்துவிட்டது.

★

நான் அந்த வாய்க்கால் மூங்கில் பாலத்தை அடையும் நேரமும் சூரியன் அஸ்தமிக்கும் நேரமும் அனேகமாய் ஒன்றாய்த்தானிருக்கும். சாலைக்கும் அந்தக் கிராமத்துக்கும் உள்ள இணைப்புப் பாதைதான் அந்த மூங்கில் பாலம். அந்தப் பாலத்தருகே ஒய்யாரமாக நிற்கும் ஆலமரத்தின் அடியிலே ஒரு கணம் நின்று, மேற்கே செவ்வெய்யிலும் மஞ்சள் வெய்யிலும் ஒன்றை ஒன்று பின்னிப் பிணைந்து உருளும் அந்த மோகனக் காட்சியைச் சற்று நின்று அனுபவித்தேன். அந்தப் பாலத்துக்குச் சமீபத்திலே இருந்த ஒரு படித்துறையில் வந்து நின்ற பெண் என் கவனத்தைக் கவர்ந்தாள். அவள் எந்த விதமான அலங்காரமும் செய்து கொள்ளாமலிருந்தாலும் அவளுடைய இயற்கை அழகு ஒளி விட்டு வீசியது. அவளுடைய முகத்திலே ஒரு குறுகுறுப்பு, கண்களில் ஒரு பரபரப்பு. ஆனால் அவளுடைய செயலெல்லாம் அர்த்தமற்ற நிதானம்!

அவள் தன் இடுப்பில் இருந்த குடத்தைக் கீழே இறக்கிவைத்துத் தேய்த்தாள், தேய்த்தாள், அப்படித் தேய்த்தாள். பிறகு சலசல வென்று ஓடுகின்ற தண்ணீரின் மேல்பரப்பை அப்படியும் இப்படியுமாக அந்தக் குடத்தாலேயே அவள் கலக்கிக் கொண்டிருந்தாள். சிறிது நேரம் கழித்துக் குடத்தைத் தண்ணீரில் அமுக்கினாள். வாய்க்கால் தண்ணீர் 'குடு, குடு' வென்று இசை பாடிக்கொண்டே குடத்திற்குள் சென்றது. அந்த இசையைக் கேட்டபடியே நான் இமை கொட்டாமல் அவளைப் பார்த்துக் கொண்டு நின்றேன்.

தண்ணீர்க் குடத்தை ஒரு வீசு வீசி இடுப்பில் 'தொப்'பென்று வைத்துக் கொண்டு அவள் என்னை நிமிர்ந்து பார்த்தாள். ஒரு கணம் எங்கள் இருவர் கண்களும் சந்தித்தன. அவ்வளவுதான்; 'சடக்' கென்று திரும்பி, அவள் தன் வலது கையை வீசிக்கொண்டு நடக்க ஆரம்பித்து விட்டாள்.

இது நடந்து மூன்று வருஷங்கள்தான் ஆகின்றன. என்றாலும், நேற்று நடந்தது போன்ற நினைவும் எத்தனையோ வருஷங்களுக்கு முன் நிகழ்ந்தது போன்ற பிரமையும் என் மனதில் உண்டாகிற்று. அதை நினைத்துக் கொண்டே வீட்டிற்குள் சென்றேன். ஆற்றுக்குத் தண்ணீர் கொண்டுவரச் சென்றிருந்த சரோஜா, என்னைப் பார்த்துக் கொண்டே குடத்தை இறக்கிக் கீழே வைத்தாள்.

★

அப்பொழுதுதான் படுத்தாற்போலிருந்தது. அதற்குள் "வெந்நீர் எடுத்து வைச்சு ஆறிப் போவுது; எண்ணெய் தேச்சுக்க எழுந்திருங்கோ!" என்ற சரோஜாவின் வார்த்தைகள் எனக்கு ஆச்சரியத்தை அளித்தன. கட்டிச் சுருட்டிக் கொண்டு எழுந்து, கண்ணைக் கசக்கிவிட்டுக் கொண்டு பார்த்தேன்.

பட்டணத்திலிருந்து நான் வாங்கி வந்த பட்டுப் புடவையைக் கட்டிக் கொண்டு "இந்தப் புடவை நன்னாயிருக்கோ!" என்று கேட்டவள், என் பதிலை எதிர்பாராமல் நேரே வாசல் பக்கம் போனாள். அடுத்த நிமிஷம் "ஐயோ! பாவம்" என்ற சரோஜாவின் சோகம் கலந்த குரல் என் காதில் விழுந்தது. நானும் எழுந்து வாசலுக்குச் சென்றேன்.

வீட்டு வாசலில் ஒரு பெண் நின்று கொண்டிருந்தாள். அவள் புடவைத் தலைப்பைப் பிடித்தபடியே ஆறு வயதுப் பையன் ஒருவன் கவலையோடு நின்று கொண்டிருந்தான். அந்தப் பிச்சைக்காரியை நான் ஆச்சரியத்துடன் பார்த்தேன். 'பிச்சைக்காரிக்கு இத்தனை அழகா!' என்று சொல்ல வந்த நான், சரோஜாவைப் பார்த்தவுடன் ஜாக்கிரதையாக வார்த்தையை விழுங்கி விட்டேன். பிரம்மதேவன் சிருஷ்டியில் அழகு பொதுவுடைமை என்று அவளது இயற்கையான தோற்றம் அறிவித்தது. அவள் உடுத்தியிருந்த கந்தல் துணியும், எண்ணெய் காணாத பரட்டைத் தலையும்கூட அவளது அழகைக் குறைக்கும் முயற்சியில் படு தோல்வி அடைந்து விட்டன.

"நல்ல பணக்காரக் குடும்பத்தில் பிறக்கும் பெண்களைப் பார்க்க முடியவில்லை.



"இங்கேயே கட்டிக்குங்கோ! நிறையப் பலகாரம் தருகிறேன்......"

பாவம், அழகு நிறைந்த இந்தப் பெண் பிச்சைக்காரியாக இருக்கிறாள். "என்ன உலகம் இது!" என்று எண்ணிக் கொண்டே, "என்ன சரோஜா, ஏன் அப்படி அவர்களை வெறிக்கப் பார்த்துக் கொண்டு நிற்கிறே?" என்று கேட்டேன்.

"ஒன்றுமில்லை; 'தீபாவளிக்குப் பட்டுப் புடவையும் அதுவுமா உடுத்திக் கொண்டிருக்கிறியே, ஒரு பழைய புடவை இருந்தா போடேன், இந்தக் குழந்தைக்கு ஒரு கிழிந்த சொக்காய் இருந்தால் கொடேன், குளிர் தாங்கல்லே!' என்று அவள் என்னைக் கேட்டாள். நான் ஒன்றுமே புரியாமல் நிற்கிறேன்!" என்றாள் அவள்.

"அதற்கு நாம் என்ன பண்ணுவது? உள்ளே வா" என்றேன்.

பாதி மனசோடு பதில் பேசாமல் உள்ளே வந்த சரோஜாவை, "அம்மா, தாயே! என் புள்ளைக்காவது ஏதாவது கிழிஞ்ச சட்டை இருந்தா கொடுங்க!" என்று தன் இனிய குரலில் ஏக்கத்துடன் கேட்டாள் அந்தப் பிச்சைக்காரி.

என் மனதையும் அந்த வார்த்தை என்னமோ செய்து விட்டது. "சரி, உனக்கு இஷ்டமானதைக் கொடு!" என்று சொன்னதுதான் தாமதம், சரோஜா ஒரு துள்ளுத் துள்ளி உள்ளே ஓடினாள்.

சிறிது நேரத்துக்கெல்லாம் அந்தப் பையனுக்கு ஒரு புதுத் துண்டும், அவளுக்கு ஒரு புதுப் புடவையும் கொண்டு வந்து கொடுத்து, "இங்கேயே கட்டிக்குங்கோ! நிறைய பலகாரம் தருகிறேன். சாப்பிட்டுட்டுப் போகலாம்" என்று சொல்லி விட்டு, உள்ளே சென்று ஒரு தட்டு நிறைய இட்லியையும் தோசையையும் கொண்டு வந்து வைத்து விட்டுத் திருப்தி யடைந்தவளாய் என்னைப் பார்த்தாள்.

"ஆமாம், சுதந்திர நாட்டில் யாரும் தீபாவளி கொண்டாடாமல் இருக்கக் கூடாதல்லவா?" என்று சொல்லிக் கொண்டே, நான் சரோஜாவுடன் வீட்டிற்குள் சென்றேன்.

"இந்த மாதிரி மனசு உள்ளவர்கள் இருந்தால் நாட்டில் பஞ்சமே இருக்காது!" என்று நன்றி நிறைந்த குரலில் அவள் சொன்னது, நாம் சுதந்திரத் தீபாவளி கொண்டாடினோம் என்ற சந்தோஷத்தை எங்களுக்கு அளித்தது.

# ஆகாச வெடி

"ஈத் தொழுகைக்கும் தசராக் கொண்டாட்டத்துக்கும் பின்பு முஸ்லிமும், ஹிந்துவும் ஒருவரை ஒருவர் அணைத்துக் கொண்டனர்."

— அதிகாரச் செய்தி.

இவ்விதச் செய்கைகளின் மூலமாக வகுப்புக் கலவரம் என்னும் தீயை அந்த ஊரில் அணைத்து விட்டனர் என்று கூறலாமல்லவா?

★

"திருநெல்வேலியில் போலித் துணி ரேஷன் கார்டுகள் தயாரித்த நபர்கள் பிடிபட்டனராம்."

— தி. நெ. நிருபர்.

எவ்வளவு துணிகரமாகக் காரியத்தைச் செய்திருக்கிறார்கள்!

★

"மாப்பிளஸ்தான் அனுபவ சாத்திய மானது அல்ல."

— டாக்டர் ராஜன்.

மாமனார்ஸ்தான் எப்படியோ?

"பல வருட ஆராய்ச்சியின் பயனாக முடக்கு வாதத்திற்கு ஒரு டாக்டர் மருந்து கண்டு பிடித்துள்ளார்."

— வைத்தியக் கட்டுரை.

மேற்படி டாக்டர் இந்த விஷயத்தில் பிடிவாதமாக முயற்சி செய்திருக்க வேண்டும்!

★

"கடைச் சிப்பந்திகள் மசோதாவை உடன் அமுலுக்குக் கொண்டு வரவும்."

— கோரிக்கை.

கடை சிப்பந்திகள்தானே என்று கடைசியாக வைத்துவிடக் கூடாதல்லவா?

★

"விழுப்புரத்தில் குரங்குகள் தொல்லை; குரங்கு பிடிப்பவர்கள் அகப்படாததால் நட வடிக்கை எதுவும் எடுக்க முடியவில்லை."

—விழுப்புரம் நிருபர்.

குரங்கு பிடிப்பவர்கள் அகப்பட்டால் போதுமா? குரங்குகள் அவர்களிடம் அகப்பட வேண்டுமே!

# பாரதி மண்டபத் திறப்பு விழா நிதி

| | | | |
|---|---|---|---|
| அன்பு நிலையம், புதுக்கோட்டை | 1000 | 0 | 0 |
| ஸ்ரீ வி. டி. சாமி, காஸ்மாபோலிடன் கிளப், கல்கத்தா | 250 | 0 | 0 |
| தூத்துக்குடி தே. அ. மா. அருணாசலம் செட்டியார் | 200 | 0 | 0 |
| தூத்துக்குடி கெ.ச. சங்கரலிங்கம் | 200 | 0 | 0 |
| ஏ. ஐ. ஆர்., திருச்சி | 150 | 0 | 0 |
| மாணவர் பெடரேஷன், திருச்சி | 132 | 0 | 0 |
| ஸ்ரீ ஆர். எஸ். ராமசுப்பையர், இங்கிலீஷ் சைக்கிள், சென்னை | 100 | 0 | 0 |
| ஸ்ரீ கே. ஆர். சுந்தரமய்யர், ராயல் சைக்கிள், சென்னை | 100 | 0 | 0 |
| ஸ்ரீ ஏ. என். மகரபூஷணம், அட்வகேட், திருநெல்வேலி | 100 | 0 | 0 |
| டாக்டர் கே. ராமய்யர், திருநெல்வேலி | 100 | 0 | 0 |
| ஸ்ரீ பி. சண்முகம் பிள்ளை, பாளையங்கோட்டை | 100 | 0 | 0 |
| ஸ்ரீ ரோட்ரிக்ஸ், எம். எல். ஸி., தூத்துக்குடி | 100 | 0 | 0 |
| தூத்துக்குடி ஸ்ரீ எம். வி. எஸ். சுந்தரவேல் நாடார் | 100 | 0 | 0 |
| ஸ்ரீவில்லிபுத்தூர் அ. சு. சங்கரநாராயணன் செட்டியார் | 100 | 0 | 0 |
| ஸ்ரீவில்லிபுத்தூர் சு. மு. தங்கமுடியா பிள்ளை | 100 | 0 | 0 |
| ஸ்ரீ கே. எஸ். பாலாஜி, வக்கீல், திருநெல்வேலி | 75 | 0 | 0 |
| சண்முகநாதபுரம் ஜவஹர் வாசகசாலை | 51 | 0 | 0 |
| ஸ்ரீ ஜே. வரதராஜய்யங்கார், அட்வகேட், திருநெல்வேலி | 50 | 0 | 0 |
| சங்கரன்கோவில் ஸ்ரீ எம்.கே.பி. மூலம் வரவு | 41 | 0 | 0 |
| வில்லாபுரம் கலைமகள் வாசகசாலை | 30 | 0 | 0 |
| புதுச்சேரி ஐந்து நண்பர்கள் | 30 | 0 | 0 |
| திருச்சி ஸ்ரீ வரதராஜலு செட்டியார் | 25 | 0 | 0 |
| அய்யம்பேட்டை மகாஜனங்கள் | 22 | 9 | 7 |
| அரவிந்த வேளிபுதூர் அ. சந்திரபாலி | 20 | 0 | 0 |
| கிவைசலம் ஸ்ரீ ராம சுப்ரமணிய அய்யர் | 20 | 0 | 0 |
| திருவொற்றியூர் ஸ்ரீ கே. வி. கிருஷ்ணன் | 15 | 8 | 0 |
| புதுக்கோட்டை ஸ்ரீ ராதா கிருஷ்ணய்யர் | 15 | 0 | 0 |
| சிவகாசி, பாரதி வாசகசாலை தலைவர், ஸ்ரீ பி. எஸ். ரெங்கசாமி | 15 | 0 | 0 |
| கோவில்பட்டி நேதாஜி தேசிய வாலிபர் சங்கம் | 11 | 0 | 0 |
| திருச்கனி ஸ்ரீ வி. சிவநாராயண பிள்ளை | 10 | 0 | 0 |
| இராஜபாளையம் ஸ்ரீ சுந்தசாமி செட்டியார் | 10 | 0 | 0 |
| சிலோன் அன்பர் | 10 | 0 | 0 |
| ஸ்ரீ குமாரசுவாமி | 10 | 0 | 0 |
| பாளையங்கோட்டை ஒத்தக்கடை ஐந்து நண்பர்கள் | 10 | 0 | 0 |
| பண்ருட்டி ஸ்ரீ சுப்பராயலு | 10 | 0 | 0 |
| கொடுமுடி ஸ்ரீ கொ.மா. ராமசாமி | 10 | 0 | 0 |
| கும்பகோணம் மகாஜனங்கள் | 9 | 0 | 0 |
| பரமசிவமும், நண்பர்களும் | 7 | 0 | 0 |
| சென்னை நண்பர் | 5 | 0 | 0 |

ஐந்து ரூபாய் நன்கொடை அளித்த அன்பர்கள் :— ஸ்ரீமான்கள் கோவில்பட்டி, சேது ராமசாமி செட்டியார்; கோவில்பட்டி, ச. தமிழர் செட்டியார்; கோவில்பட்டி, நா. த. த. கணபதி செட்டியார்; கோவில்பட்டி, சி.ப. நெல்லையப்ப பிள்ளை; கோவில்பட்டி, பி. எஸ். அய்யஞர்ராஜா; கோவில்பட்டி, பி. எஸ். கிருஷ்ணராஜா; சாத்தூர், ஏ.எஸ். துரைசாமி; சாத்தூர், ஜே. தாவுத்கான்; சாத்தூர், ஆர். சொக்கலிங்க செட்டியார்; சாத்தூர், இருத்தையா தேவர்; சாத்தூர், முத்துப் பிள்ளை; சாத்தூர், ராஜாமணிப் பிள்ளை; சாத்தூர், வி. ராமச்சந்திரன்; சாத்தூர், வி. நவநீதன்; சாத்தூர், ஏ. சுன்னரமூர்த்தி கோனார்; சாத்தூர், பி. சுந்தரராஜ கோனார்; சாத்தூர், சோமசுந்தரம்; சாத்தூர், அழகர்சாமி செட்டியார்; சாத்தூர், மு. கருப்பசாமி; சாத்தூர், மு. முத்தையா; பாண்டவர்மங்கலம், சு. பூதுரைசாமி தேவர்; பாண்டவர்மங்கலம், ச. குருசாமி நாயக்கர்; பாண்டவர்மங்கலம், பெ. முத்தங்கு தேவர்; பாண்டவர்மங்கலம், க. சங்கரராமன்; வில்லிச்சேரி, வி. ஏ. பெருமாள் சாமி; வில்லிச்சேரி, க. கணபதி ஆசாரி; வில்லிச்சேரி, பெ. கொண்டஜராயஜராமி நாயுடு; வில்லிச்சேரி, அ. செ. வெங்கடராம நாயக்கர்; கோவில்பட்டி, எஸ். காளியப்பன்; கோவில்பட்டி, ஒ. டி. ராமசாமி; கோவில்பட்டி, திருப்பதி நாயுடு; விருதுநகர், சிவந்தி நாராயண நாடார்; புதுக்கோட்டை, எஸ். மூஜு பழனியப்பன்; புதுக்கோட்டை, சேதுராமன்; மேட்டூர் பி. நீலகண்டன்; ராசிபுரம், பாரதி பிரஸ்; அருப்புக்கோட்டை, ரத்தினவேல் நாடார்; அருப்புக்கோட்டை, ரெங்கசாமி; கீழச்செவல்பட்டி, காங்கிரஸ் காரியதரிசி; காஞ்சிபுரம், ச. சண்முகம்; மதுரை, மூன்றிக்கேந்திரன்; ஈரோடு, சுப்பிரமணியம்; அம்மை, வேலு முதலியார்; அம்மை, சுப்பு முதலியார்; சாத்தூர், ராமசந்திரன்; சாத்தூர், ராஜகோபாலன்; சாத்தூர், தனுஷ்கோடி; பாளையங்கோட்டை, இண்டன்டிரியல் ஆபர்லைசர்; திருச்சி, ரெங்கசாமி நாயுடு; நடராஜபுரம் கி. கே.; வில்லிச்சேரி, வீரப்ப நாயக்கர்; வில்லிச்சேரி, ராமசுப்பு நாயக்கர்; தலைவர், ஏரல் கிராமக் காங்கிரஸ் கமிட்டி; ஏரல் கிராமக் காங்கிரஸ் கமிட்டி காரியதரிசி; திருக்காட்டுப்பள்ளி, வரதராஜன்; பனையூர், கெ. சுப்பிரமணியம்; பனையூர், முருகேசன்;

பனையூர். பி. கே. இருவேங்கடம்; பனையூர், சுப்பிரமணியம்; பனையூர், சங்கர செட்டியார்; பி. சங்கரன்; எஸ். கருப்பையா; எஸ். கருப்பையா; கோவை, ஆர். கிருஷ்ணன்; ஆர். ராமநாதன்; மதுரை, எம். சோலை முத்துக் கோனார்; மதுரை, ஏ.பி. ஆறுமுகம்; மதுரை, பி. மயிலேறி; மதுரை, கே. நாக சுந்தரம்; மதுரை, ராமச்சந்திரன்; தேனி, ராமகிருஷ்ணன் செட்டியார்; அருப்பு கோட்டை, சுப்பிரமணிய பிள்ளை.

மதுரை நண்பர்கள், ரூ. 3-0-0; இரண்டு ரூபாய் நன்கொடை அளித்த அன்பர்கள்:— ஸ்ரீமான்கள்: பரமக்குடி, நா. கோபாலனும் அருணாசலமும்; கோயமுத்தூர். பி. டி. ராமசாமி; சேலம், நாராயணன்; பேட்டை, சு.ம. சுப்பிரமணியன்; மேச்சேரி, என். அன்னையன்; மதுரை, பி. எஸ். கிருஷ்ணய்யர்.

ஒரு ரூபாய் நன்கொடை அளித்த அன்பர்கள்:—ஸ்ரீமான்கள: ஆர். சங்கர்; மதுரை, அய்யாவு; மதுரை, குஞ்சிதபாதம்; திருச்சிறைப்பள்ளி, ஆர். ரெங்கநாதராவ்; மதுரை, சண்முகம் "பிள்ளை; பாளையம், சுப்பையா பிள்ளை; சோழவந்தான், சுப்பையா பிள்ளை; ஸ்ரீவில்லிபுத்தூர், முனியாண்டியும் குருசாமியும்; ஸ்ரீவில்லிபுத்தூர், முனியாண்டி. ஆக மொத்தம் ரூ. 834—8—0.

## வரவேற்புக் கமிட்டி அங்கத்தினர்

### (இருபத்தைந்து ரூபாய் சந்தா அளித்தவர்கள்)

சங்கரன் கோவில், என். மீனாக்ஷி சுந்தரம் பிள்ளை; எட்டயபுரம், ச. பொ. கருப்பசாமித்தேவர்; திருநெல்வேலி எஸ். கோபால கிருஷ்ணன்; கீட்டுளாபுரம், வி. எஸ். வெங்கிடாச்சாரி நான்குநேரி; பி. டி. கிருஷ்ண பிள்ளை; கோவில்பட்டி, ராமசாமி தாஸ்; அருப்புக்கோட்டை, ஏ.பி. நாராயண மூப்பனார்; அருப்புக்கோட்டை: எஸ்.கே.எ. ராமகிருஷ்ணன்; அருப்புக்கோட்டை. கே. ஆர். எஸ். வீரப்பன் செட்டியார்; அருப்புக் கோட்டை, ஆர். வெங்கிட்டரமணருன்; அருப்புக்கோட்டை, என். எம். ராமையா; கங்கைகொண்டான், ஜி. சங்கரய்யர்; புளியங்குடி, எஸ். எஸ். உலகமுத்து செட்டியார்; புளியங்குடி, மூமகந்தர கருணைய பாண்டியர்; புளியங்குடி, உ. மா. பிச்சையா செட்டியார்; புளியங்குடி, எ. எஸ். ஆறுமுக முதலியார்; குலசேகரபட்டணம், வி. சிவசுப்பிரமணிய பிள்ளை; அருப்புக்கோட்டை, எஸ்.வி. எஸ். சோமசுந்தரம் செட்டியார்; வண்ணார் பேட்டை, கே. எஸ். பாலாஜி; ஸ்ரீவைகுண்டம், சின்னத் தம்பி தேவர்; எட்டயபுரம், டி. ஆர். சுந்தரம்; தடுவப்பட்டி, நெசவாளர் சங்கத் தலைவர், மு.சி. தர்ம முதலியார்; தென்காசி, பி.சி. சுப்பராஜா; முக்கூடல், டி. எஸ். ஆதிமூலம்; வண்ணார்பேட்டை, பக்கிரிராஜன்; சங்கரன்கோவில், எ. வி. ஆர். எம். எஸ். ராமசாமி; தூத்துக்குடி, எ.பி.சி. வீரபாகு; பாரைப்பட்டி, ரா. அய்யாப்ப நாயக்கர்; எட்டயபுரம், கே. பி. எஸ். நாராயணன்; எட்டயபுரம், சி. நரசிம்ம ராவ்; எட்டயபுரம், டி. சுவாமிநாதன், எட்டயபுரம், எம். கைலாச சுந்தரம்; அருப்புக்கோட்டை, சு. ச. சண்முகவேல்; அருப்புக்கோட்டை, மா. ம. பழனிச்சாமி நாடார்; அருப்புக் கோட்டை, சு. மீ. கனகய்யா; அருப்புக் கோட்டை, பி. சுந்தரேசன் செட்டியார்; சங்கரன்கோவில், மாணிக்கவாசகம் செட்டியார்; சங்கரன் கோவில், எம். சங்கர பாண்டிய கரையாளர்; சங்கரன் கோவில், கருப்பையா பிள்ளை; சங்கரன் கோவில், எஸ். பி. பி. முத்துசாமி செட்டியார்; அம்பாசமுத்திரம், சிவ. ராம. அ. நடராஜ முதலியார்; திருநெல்வேலி, ஜங்ஷன் ரதிவிலாஸ் எம். பழனியப்பன்; கல்லிடைக் குறிச்சி, எ. வேலாயுத முதலியார்; எட்டயபுரம், ஆ. தங்கசாமி நாடார்; சாமிநத்தம், தாலூகா காங்கிரஸ் தலைவர், எஸ். கே. அழகிரிசாமி; கோவில்பட்டி, ஜி. சங்கரய்யர், Medical Practitioner; திருநெல்வேலி கஸ்தூரிபா கடை, ஆர். செங்கசாமி ரெட்டியார்; பேட்டை ஊகொத்தம் ஜெனரல் கமிஷன் ஏஜண்டு, என். சங்கரன்; திருநெல்வேலி, கே. எஸ். முத்து அய்யர்; திருநெல்வேலி, குப்புசாமி நாயக்கர்; அம்பாசமுத்திரம் நகர காங்கிரஸ் கமிட்டி காரியதரிசி, எஸ். எஸ். சுந்தரசாமி முதலியார்; தூத்துக்குடி, பி. எஸ். வெங்கட்டராமய்யர்; கடம்பூர், கே. எ. சுப்பையா; பொய்யூர், விநாயக மில்ஸ், ரா. கணபதி செட்டியார்; பாளையங் கோட்டை, பி. ஜெகநாதன் எம். எ.; கோவில்பட்டி, தொழிலாளர் சங்கத் தலைவர், எஸ். ஆர். வரதராஜுலு நாயுடு; எட்டயபுரம், கே. மாரியப்ப நாடார்; கடலையூர், கிராமக் காங்கிரஸ் கமிட்டி தலைவர், வி. முத்தையா; சங்கரன்கோவில், பஞ்சாயத்துப் போர்டு வைஸ் பிரசிடெண்டு, எஸ். எம். கே. பாலசுப்பிரமணிய செட்டியார்; கோவில்பட்டி அட்வோகேட், ஸ்ரீனிவாச அய்யங்கார்; கோவில்பட்டி வக்கீல், வி. முத்தையா கவுண்டர்; நாகலாபுரம், உணவுக் கமிட்டி தலைவர், டி. எஸ். கடற்கரை; திருக்காட்டுப்பள்ளி, ரெங்கநாதபுரம் திராவிடக் கலைமணி, வி. முத்துசாமி அய்யர்; தூத்துக்குடி நகர காங்கிரஸ் கமிட்டி காரியதரிசி; மு. துரைசாமி; பிள்ளையார்குளம், எஸ். டி. ஹரிஹர அய்யர்; புவனகிரி, ஏ. முத்துக்குமார்; சென்னை, ஜானம்மாள்; ஆறுமுகநேரி, ராஜா பலவேசமுத்து; அவினாசி, ஜின்னிங் பாக்டரி, ஜி. சஞ்சீவி ராவ்; சென்னை, விஸ்வபாரதி இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி, டி. எஸ். பஞ்சு ஐயர். மயிலாப்பூர் சாந்திநிகேதன், டி. எஸ். முத்துசாமி அய்யர்; சென்னை அட்வகேட், ஆர். வெங்கடராமன்; தென்காசி, டாக்டர் எஸ். என். ரெங்காச்சாரி; தென்காசி, எஸ். ராமசாமி நாயுடு; இலஞ்சி ஐ. கே. சுப்பிரமணிய பிள்ளை; மதுரை, டி. நாகலிங்கம் செட்டியார்; மதுரை, வி. சுந்தரம்; மதுரை, எ. வி. அன்டு சன்ஸ்; மதுரை, பி. எ. எஸ். எஸ். என். சோமசுந்தரம் செட்டியார்; மதுரை, பெ. மு. சு. முத்துசாமி செட்டியார்; மதுரை, எஸ். கே. என். சொக்கலிங்கம் செட்டியார்; மதுரை, கே. ராமலிங்கம் செட்டியார்; மதுரை, சிவராஜ் சேட்; மதுரை, சிரஸ் சேட்; மதுரை, பி. கே. ராமாச்சாரி; வெ. எ. பா. சி. த. பாண்டியன் செட்டியார்; விருதுநகர், வி. பழனி செட்டியார்; விருதுநகர், இ. மாணிக்கம் ஆச்சாரி; விருதுநகர், பி. ஏ. எஸ். அருணாசலம் செட்டியார்; ஸ்ரீவில்லிபுத்தூர், ராஜா ஸ்டோர்; ஸ்ரீவில்லிபுத்தூர், ஜெனரல் மெர்ச்சண்ட்; ஸ்ரீவில்லிபுத்தூர், ஆர். சுப்பையா பிள்ளை; ஸ்ரீவில்லிபுத்தூர், பி. கிருஷ்ண ராவ்; ஸ்ரீவில்லிபுத்தூர், ஆ. ப. வீரபத்திர பிள்ளை; சங்கரன் கோவில், த. சோமராஜுலு; கோவில்பட்டி, ஷண்முகம் பிள்ளை; எட்டயபுரம், சுந்தரசாமி செட்டியார். ரா. கிருஷ்ணமூர்த்தி, ஆசிரியர், கல்கி; டி. சதாசிவம், மானேஜர், கல்கி.




# ஒரு வர்த்தக முத்திரையைப் பார்க்கிலும் அதிகம்

ஒரு துணியின் இழை நேர்மை, தோற்றத்தினின்று அது என்ன ரகம் என்பது நெசவுத் தொழில் நிபுணர்களால் பகுத்தறிய முடியலாம். ஆனால் ஒரு துணிமீது கேவலம் இந்த ஆடு மார்க்கு மட்டும் அச்சிடப்பட்டிருப்பதே அதன் குணத்திற்கும், பெருமதிக்கும் தங்களுடைய உத்தரவாதமென எங்களுடைய எண்ணிறந்த வாடிக்கைக்காரர்கள் சொந்த அனுபவத்தினின்று அறிவர்.... உள்ளதில் மிகச் சிறந்த ரகம், மிகத் தாழ்ந்த விலை...விலைவாசிகள் வானளாவும் இப்பஞ்ச காலத்தில் இவ்விரண்டும் ஒருங்கே சேர்ந்தமைவது அரிதெனவே கூறவேண்டும்.

இந்த மார்க்குடைய நெசவுத் தரங்களையே அதிகம் விரும்புவதில் அவர்களுடைய பகுத்தறிவை — அல்லது உங்களுடையதை — எந்த நிபுணராலும் மிஞ்ச முடியாது.

கம்பளி : பூராவும் கம்பளி ஸூப்பர் ப்லாங்கெட்டுகளும் பிரயாணரக்குகளும்—ட்வீடுகளும், நேரிய கம்பளி நிஜுசுகளும், யூனியன் ஷர்ட்டிங்குகளும்.

பருத்தி : ஸெல்லா ஷர்ட்டிங்குகளும், நேரிய லாங்கிலாத்தும்—கோல்ட் ஸ்டாண்டர்ட் ஷர்ட்டிங்குகள்—லேடி லாங்கிலாத்தும், சாயம் தோய்த்ததும்—ஸம்ரா ஸூட்டிங்குகள்—டஸ்ஸோர்கள்—ட்ரில்கள்—ட்வில்கள் வகையறா.

பட்டு : 44"/45" அகலம், பற்பல சாயல்களில்.

தயாரிப்போர்கள்: தி பங்களூர் வூலன், காட்டன் & ஸில்க் மில்ஸ் கோ., லிட்.

ஏஜண்டுகள், காரியதரிசிகள், ட்ரெஷரர்கள்

பின்னி & கோ.

(சென்னை) லிட்.



"ஆடு மார்க்கு"—அணிவதற்குகந்த துணிகளின் அறிகுறி.



ஜேபில் நிறைய காசுள்ளவர்கள் விலைவாசிகளை உயர்த்தி சாதாரண ஜனங்களுக்கு அன்றாடம் தேவையான பொருட்களை வாங்க முடியாமல் செய்கின்றனர்.
உங்கள் ஹமாம், 501 ஸோப்புகளுக்கு நியாயமான சில்லறை விற்பனை விலைக் கதிகம் கொடுக்காதீர்கள்.

## ஹமாமும் 501 ஸோப்புகளும்

தி டாடா ஆயில் மில்ஸ் கம்பெனி லிமிடெட்

---

நந்தேச சீதோஷ்ண ஸ்திதிக்கேற்க செய்யப்பட்ட

# பில்கோ ரேடியோ




அழகிய ப்ளாஸ்டிக் பெட்டி

சாதாரண கிராமபோன் விலையில்

இப்போது உங்களுக்குக் கிடைக்கும்.

ரூ. 385

உங்களுக்கு இஷ்டமான ஸ்டேஷன்களைக் கேட்கலாம்

விவரங்களுக்கு எழுதுங்கள்: சென்னை மாகாண, சமஸ்தான விநியோகஸ்தர்கள்

## மகமத் இப்ராஹிம் அண்ட் கோ

“விஜய மாளிகை” 7-8, மவுண்ட் ரோடு, மதராஸ்-2




# கம்பர் தரும் காட்சி

• • •

## 193. வீடு தங்களுடையது!

சுக்ரீவன் தன் தமையனால் துன்புறுத்தப் பட்டான் என்றதைக் கேட்ட மாத்திரத்தில் அவனிடம் ஒரே இரக்கம் உண்டாய் விட்டது ராமனுக்கு. இனி உனக்கு ஏற்படும் கஷ்டமெல்லாம் எனக்கும் ஏற்பட்டவைதான், வேறல்ல என்று உணர்ச்சியோடு சொன்னான் ராமன்.

மேலும் ஆவேசத்தோடு பேசுகிறான்:

"வானத்திலானாலும் சரி, இந்த உலகத்திலானாலும் சரி, யாராவது உன்னைத் துன்புறுத்தினார்கள் என்றால் என்னையே துன்புறுத்தினவர்கள் தான் அவர்கள்."

'மற்றினி உரைப்பதென்னே!
வானிடை மண்ணில் நின்னைச்
செற்றவர் எம்மைச்செற் றார்;
தீயரே எனினும் உன்னோ(டு)
உற்றவர் எமக்கும் உற் றார்;
உன்கிளை எம(து), எம்காதல்
சுற்றம் உன் சுற்றம்; நீ எம்
இன்னுயிர்த் துணைவன்' என் றான்.

[வானிடை மண்ணில்: வானவரானாலும் சரி, மக்களே யானாலும் சரி; நின்னைச் செற்றவர்: உன்னைத் துன்புறுத்தியவர்; உன்னோடு உற்றவர்: உனக்குச் சிநேகமாக உள்ளவர்; உன் கிளை எமது: உன்னுடைய சுற்றத்தார் என்னுடைய சுற்றத்தார் ஆவர்; எம் காதல் சுற்றம்: என்னிடத்தில் அன்பு பாராட்டுகிற சுற்றத்தார்; இன் உயிர்த் துணைவன்: உயிருக்கு உயிரான நண்பர்.

குறிப்பு:—செய்யுளில், உள்ளம் நிறைந்து பொங்கிய காரணத்தால் தன்னை ஒருமைப் படுத்தி 'எனக்கு' என்று சொல்ல நேர்ந்தது ராமனுக்கு. உள்ளத்தின் வேகம் கொஞ்சம் குறையவும் விஷயந் தெரிந்தவனாய் லக்ஷ்மணனையும் சேர்த்து 'எம்மை' என்று சொல்லுகிறான் — 'நின்னைச் செற்றவர் எம்மைச் செற்றார்.']

• • •

உள்ளத்திலிருந்து வந்த அந்த உறுதிமொழியைக் கேட்ட மாத்திரத்தில் பக்கத்திலிருந்தவர்கள் எல்லாருக்கும் ஒரே ஆனந்த வெறி உண்டாய் விட்டது. குரங்குக் கூட்டம் எல்லாம் ஒரே பிடியாய் ஆரவாரம் செய்தன. அஞ்சனையின் மகனான அனுமனது மேனி யெல்லாம் புளகாங்கித மடைந்தது. மரங்களிலிருந்து புஷ்பங்கள் உதிர்ந்தன—வானத்திலிருந்து விழுந்த



மனைவி:—எல்லாவற்றையும் நீங்களே கொளுத்தி விடுகிறீர்களே! குழந்தைக்கும் கொஞ்சம் வைத்திருங்கள்.........!

மாதிரி. அதே சமயத்தில் மேகத்திலிருந்தும் திவலைகள் மெள்ள விழுந்தன.

ஆர்த்தது குரக்குச்சேனை,
அஞ்சனை சிறுவன்மேனி

போர்த்தது பொடித்தரோமப்
புளகிதம், பூவின்மாரி

தூர்த்தனர் விண்ணோர், மேக
வண்ணனுங்(கு) அருளிச்சொன்ன

வார்த்தைஎக் குலத்துளோர்க்கும்
மறையினும் மெய்யென்(று)
உன்னு!

[ஆர்த்தது குரக்குச் சேனை: குரங்குகளாலாகிய படை சந்தோஷத்தினால் ஆரவாரித்தது: அஞ்சனை சிறுவன் மேனி: அனுமனது மேனி: போர்த்தது: போர்த்துக் கொண்டது: பொடித்த ரோமப் புளகிதம்: நிமிர்ந்துநின்ற ரோமம் புளகித்தாள்: பூவின்மாரி தூர்த்தனர் விண்ணோர்: தேவர்கள் சொரிந்தார்கள் என்று சொல்லும்படி மரங்களிலிருந்து பூமாரி பெய்தன: மேக வண்ணன் ஆங்கு அருளிச் சொன்ன வார்த்தை: மேக வண்ணனான ராமன் உன்னைக் கனிந்து சொன்ன வார்த்தை: எக்குலத்துளோர்க்கும் மறையினும் மெய் என்று உன்னு: வேதமானது எப்படி ஜாதி பேதங்களைக் கடந்து உண்மை பேசுகிறதோ, அப்படியே ராமன் சொன்ன வார்த்தையும் ஜாதி பேதங்களைக் கடந்து சொன்ன வார்த்தை என்று எண்ணி—ஆர்த்தது குரக்குச் சேனை.]

• • •

அனுமனும் அப்படியே எழுந்து சென்று ராமன் பாதத்தில் வணங்கியவனுக் கைகளைக் கூப்பிக் கொண்டு சொல்லுகிறான்:

ஆண்டெழுந்(து) அடியில்தாழ்ந்த
அனுமனும் நடக்கைகூப்பி,

'தூண்திரள் தடந்தோள்மைந்த,
தோழனும் நீயும்வாழி!

ஈண்டுநும் கோயில்எய்தி
இனிதின்உம் இருக்கைக்காண

வேண்டும்நும் அருள்என்?' என்றான்
வீரனும் 'விழுமி(து)' என்றான்.

[தூண் திரள் தடந்தோள்மைந்த: தூண் போன்ற திரண்ட தோளையுடைய ராமனே: தோழனும் நீயும் வாழி: உனக்கு உயிர்த்தோழனாய் அமைந்திருக்கின்ற சுக்ரீவனும் நீயும் என்றென்றும் வாழ்க: ஈண்டு நும் கோயில் எய்தி: உங்கள் இருவருக்கும் சொந்தமான அரண்மனைக்கு இப்போது போய்: இனிதின் நும் இருக்கை காண வேண்டும்: உனக்கு ஸ்திரமான வாசஸ்தலம் இருக்கிறது. அதில் குடியேறும்படி எழுந்தருள வேண்டும்; நும் அருள் என்: உன்னுடைய திரு உள்ளம் எப்படியோ என்றான்: வீரனும் 'விழுமிது' என்றான்: ரொம்பச் சரி என்று சொன்னான் ராமனும்.

குறிப்பு:—'நும்' என்று சொன்னது சுக்ரீவனது அரண்மனை உனக்கும் சொந்தமானது என்று சொல்லும் உபசாரம்.]

ராம லக்ஷ்மணர்கள் சுக்ரீவனது அரண்மனைக்குப் போகும் விஷயமாக அடுத்த இதழில்.



★

"என்ன, ஸார்! ராத்திரி யெல்லாம் ஒரே அமர்க்களமா பட்டாசு வேட்டுக்கள் போலிருக்கிறதே! அதனால் எனக்கு ராத்திரிப் பூரா தூக்கமே வரலே, ஸார்!"

"என்ன, எங்காத்திலேயா! எனக்குத் தெரியாது, ஸார்! ராத்திரி நன்றாத் தூங்கிக் கொண்டிருந்தேன்!"

★

எந்த ரஸ்தாவுக்கும்
எவ்வளவு பாரம் தாங்குவதற்கும்

அழுத்தமான
டயர்கள்
அத்தியாவசியம்

# டன்லப் ஜயன்ட்கள்



# இரவும்

அதுதான் அவனுக்குத் தலை தீபாவளி. இரண்டு நாள் முன்னதாகவே அவள் இருக்கும் ஊருக்குக் கிளம்பி விட்டான் அவன். அன்றிரவு மணி எட்டுக்கு மேலிருக்கும். ரயிலில் ஏறி உட்கார்ந்ததும் அவளுக்காகத் தான் வாங்கியவையெல்லாம் தன்னைப் போலவே ரயிலுக்குள் பத்திரமாக வந்து சேர்ந்திருக்கின்றனவா என்று ஒரு முறை பார்த்துக் கொண்டான்.

அவற்றை யெல்லாம் ஒவ்வொன்றாக எடுத்துப் பார்க்கும்போது அவனையும் அறியாமல் அவனுக்குச் சிரிப்பு வந்தது. "இவை யெல்லாம் அவளுக்குப் பிடித்தமானவை என்று நினைத்து, உண்மையில் நமக்குப் பிடித்தமானவைகளை யல்லவா வாங்கியிருக்கிறோம்!" என்று தனக்குத் தானே வாய்விட்டுச் சொல்லிக் கொண்டான்.

நாளை பொழுது விடிந்ததும் ஊர் போய்ச் சேர்ந்துவிடலாம். அவள் நம் வரவை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருப்பாள். யாரும் தன்னைக் கவனிக்கா விட்டால், வீட்டுக்கும் வாசலுக்குமாக அவள் நடந்து கொண்டிருப்பாள்; யாராவது தன்னைக் கவனிக்கிறார்கள் என்று தெரிந்தால், தன் அறையின் ஜன்னலருகே நின்று, அவள் தெருக் கோடியைக் கண் கொட்டாமல் கவனித்துக் கொண்டிருப்பாள்!

ஒரு வேளை அவள் நம்மைக் கண்டதும் எங்கேயாவது ஓடி ஒளிந்து கொள்வாளோ! அதற்குப் பிறகு மறுநாள் தீபாவளி யன்றைக்குப் பட்சணம் எடுத்துக் கொண்டு வரும்போதுதான் அவளைப் பார்க்க முடியுமோ?

அப்படியே ஒளிந்து கொண்டால்தான் என்ன? நம்முடைய கண்கள் அவளைத் தேடும்போதெல்லாம் அவளுடைய கண்களும் நம்மைத் தேடிக் கொண்டுதானே இருக்கும்? அப்பொழுதெல்லாம் நம்மை அவளும், அவளை நாமும் பார்க்காமலா இருந்துவிடப் போகிறோம்?

இத்தகைய இன்ப நினைவுகளுக்கு இடையே அவனுடைய பார்வை ஜன்னலுக்கு வெளியே சென்றது. எங்கும் சூழ்ந்திருந்த கன்னங் கரிய இருள், அவனை இனந் தெரியாத வேதனையில் ஆழ்த்தியது.

"ரயில் ஓடுகிறது; அதனுடன் மரங்களும் கொடிகளும், மலைகளும் மடுக்களும் கூட ஓடுகின்றன! ஆனால் இந்தப் பாழும் இருள் மட்டும் இருந்த இடத்திலேயே இருந்து கொண்டிருக்கிறதே! எப்பொழுது தொலையுமோ?" என்று எண்ணி ஒரு நீண்ட பெருமூச்சு விட்டான் அவன். அடுத்த நிமிஷம் அவனுடைய கண்கள் சற்று அயர்ந்தன.

'சலக், சலக்'—இதென்ன, புத்தம் புதுப் பட்டுப் புடவையின் சலசலப்புச் சத்தம் போலிருக்கிறதே!

'கிலிக், கிலிக்' — இது வளையல்கள் ஒன்றோடொன்று கூடிக் குலாவும்போது உண்டாகும் ஓசையல்லவா?

அவள்தான் வருகிறாள் போலிருக்கிறது!

இப்படி அவன் நினைத்தானோ இல்லையோ, 'களுக்' என்று சிரிப்பொலி அவன் காதில் விழுந்தது.

கண்ணைத் திறந்து பார்த்தான்.

அவனுக்கு எதிரே கன்னங் கரேலென்று ஓர் உருவம் நின்று கொண்டிருந்தது.

ஓ! இவள் இருக்கிற அழகுக்கு ஜொலிக்கும் நட்சத்திரப் புடவை ஒன்றுதான்

# பகலும்

### விந்தன்

குறைவா யிருந்தாக்கும்! இதே புடவையை அவள் கட்டிக் கொண்டிருந்தால் ......?

அடாடா! அவள் என்னமா யிருப்பாள்!

அப்போது அவளை இவன் பார்த்தால் என்ன நடக்கும்? — நடப்பதென்ன? உடனே இவன் எங்கேயாவது போய்த் தூக்குப் போட்டுக் கொண்டு செத்துப் போவான்!

பிழைத்துப் போகட்டும், பாவம்! இந்தப் புடவையை அவள் கட்டவும் வேண்டாம்; அவளை இவன் பார்த்துத் தூக்குப் போட்டுக்கொண்டு சாகவும் வேண்டாம்!

இவ்வாறு எண்ணி, அதற்கு மேல் அவளைப் பார்க்கச் சகிக்காமல் மீண்டும் கண்களை மூடிக் கொண்டான் அவன்.

"என், என்னைப் பார்க்கவே பிடிக்கவில்லையா, உனக்கு?" என்று அவனைத் தன் கரங்களால் தொட்டுக் கேட்டாள் அந்த நட்சத்திரப் புடவைக்காரி.

அவன் தூக்கிவாரிப் போட்டுக்கொண்டு எழுந்தான். அவள் தன்னைத் தொட்ட இடத்தை ஒரு முறைக்கு இரு முறையாகத் தட்டிவிட்டுக் கொண்டான். பிறகு, ஆத்திரத்துடன் அவளை நோக்கி, "நீ யார்?" என்று கேட்டான்.

"சிறிது நேரத்துக்கு முன் யாரைப் பற்றி நினைத்தாயோ, அவள் தான் நான்!" என்றாள் அவள்.

"உன்னையும் எவனாவது நினைத்துக் கொள்வானா, என்ன! — யார் நினைத்துக் கொண்டாலும் நான் மட்டும் உன்னை ஏழேழு ஜன்மத்துக்கும் நினைத்துக் கொள்ள மாட்டேன்! — உனக்குப் புண்ணியமாய்ப் போகட்டும். நீ உடனே இந்த இடத்தை விட்டுப் போய்விடு!" என்று வெறுப்புடன் அவளைக் கேட்டுக் கொண்டு, மீண்டும் கண்ணை மூடிக் கொண்டான் அவன்.

அவள் சிரித்தாள்!

"என் சிரிக்கிறாய்?"

"கண்ணை மூடிக்கொண்டாயே, அதற்காகச் சிரித்தேன்!"

"அதற்காக நீ என் சிரிக்க வேண்டும்?"

"கண்ணைத் திறந்தாலாவது விளக்கின் வெளிச்சத்தில் நீ என்னைப் பார்க்காமலிருக்கலாம். கண்ணை மூடிக்கொண்டால் என்னைத் தவிர நீ வேறு யாரையுமே பார்க்க முடியாதே!"

"அப்படிப்பட்ட விசித்திர வனிதையான நீ யாரோ?"

"நிசாதேவி நான்; அமைதியை நாடும் சகல ஜீவராசிகளுக்கும் அடைக்கலம் அளிப்பவள் நான்; யார் விரும்பினாலும் விரும்பா விட்டாலும் தினந்தோறும் வந்து என் கடமையைச் செய்பவள் நான்......!"

"தயவு செய்து இன்று மட்டும் உன் கடமையை இத்துடன் நிறுத்திக் கொள். எனெனில், என் வரவை எதிர்பார்த்து ஒருத்தி காத்திருக்கிறாள். அவளை எப்பொழுது பார்க்கப்போகிறோம் என்று என் உள்ளம் துடியாய்த் துடித்துக் கொண்டிருக்கிறது. நீ எவ்வளவுக் கெவ்வளவு சீக்கிரம் என்னையும் இந்த உலகத்தையும் விட்டுத் தொலைகிறாயோ, அவ்வளவுக் கவ்வளவு சீக்கிரம் நாங்கள் சந்திப்போம்!" என்றான் அவன்.



இதைக் கேட்டு அவன் என்ன நினைத்துக் கொண்டானோ என்னமோ, மீண்டும் சிரித்தான். ஆனால், அவன் மூடிய கண்ணைத் திறக்கவே யில்லை!

***

‘கொக்கரக்கோ!’ என்று வெகு தூரத்திலிருந்து கோழி கூவும் சத்தம் கேட்டது. அதைத் தொடர்ந்து புள்ளினங்கள் உதயகீதம் இசைத்தன.

“அப்பாடி! எத்தனை எத்தனையோ யுகங்களுக்குப் பிறகு அல்லவா இந்த உதய கன்னிகை வருகிறாள்!” என்று எண்ணிப் பெருமூச்சு விட்டுக் கொண்டே கண்ணைத் திறந்தான் அவன்.

அதே சமயத்தில் ரயிலும் அவன் இறங்க வேண்டிய இடத்தில் வந்து நின்றது. அதிலிருந்து இறங்கி ‘விடு, விடு’ என்று நடந்தான். அவன் எதிர்பார்த்தது வீண் போகவில்லை; தெருக் கோடி திரும்பும் போதே அவள் அவனுடைய கண்ணில் பட்டாள்!

அவ்வளவுதான்; இந்தப் பரந்த உலகத்தில் இனி தனக்குக் கிட்டவேண்டியது ஒன்றுமே யில்லை என்று அவன் உள்ளம் பூரித்தது!

ஆனால், என்ன ஏமாற்றம்! மின்னல் தோன்றி மறைவது போலல்லவா அவள் மறைந்து விட்டாள்!

அந்த வீட்டில் உபசாரத்துக்கு ஒன்றும் குறைவில்லைதான்; ஆனால் அதைச் செய்தவர்கள்தான் ஏனோ அவன் வேண்டாதவர்களா யிருந்தார்கள்!

ரயிலில் தூங்காமல் தூங்கியதுபோல், சாப்பிடாமல் சாப்பிட்டு மாடிக்குப் போனான் அவன். அங்கே ஒரே புழுக்கமா யிருந்தது. சாளரத்தின் மூலம் வந்து அவன் மேல் விழுந்த சூரிய கிரணங்கள் ‘சுரீர், சுரீர்’ என்று உறைத்தன. “இந்தச் சனியன் பிடித்த பொழுது எப்பொழுது சாயப்போகிறதோ, தெரியவில்லையே!” என்று அலுத்துக் கொண்டான் அவன். அடுத்த நிமிடம் அவனுடைய கண்கள் சிறிது அயர்ந்தன.

‘கலீர்’ என்று யாரோ சிரித்தது அவன் காதில் விழுந்தது.

ஆவலுடன் கண்ணைத் திறந்து பார்த்தான். அவள் இல்லை; ஆம், அவள் இல்லவே இல்லை!

பின் இவள் யார்? — அவளையேதான் கேட்டு விடுவோமே!

“நீ யார்?”

“காலையில் வருந்தி வருந்தி யழைத்தாயே, அவள்தான் நான்!”

“உதய கன்னிகையா! அம்மம்மா! நீ வந்தாலும் எத்தனையோ யுகங்களுக்குப் பிறகு வருகிறாய்; போனாலும் எத்தனையோ யுகங்களுக்குப் பிறகு போகிறாய்! ஏன் இப்படி?”

“நான் என்னமோ வழக்கம்போல் வந்து போய்க் கொண்டுதான் இருக்கிறேன். உங்களைப் போன்ற இளம் காதலர்களுக்குத்தான்......”

“சரி, சரி; உன்னுடன் பேசிக் கொண்டிருப்பதற்கு வேண்டிய பொறுமை எனக்கு இல்லை. நீ எவ்வளவுக் கெவ்வளவு சீக்கிரம் என்னையும் இந்த உலகத்தையும் விட்டுத் தொலைகிறாயோ, அவ்வளவுக் கவ்வளவு சீக்கிரம் நான் அவளைச் சந்திப்பேன். அவள் இன்றிரவு தன் தெய்வமணிக் கையால் எனக்கு அன்னமிடா விட்டாலும் அமிர்தமாவது கொண்டு வந்து கொடுப்பாளல்லவா?” என்றான் அவன்.

மீண்டும் ‘கலீர்’ என்ற சிரிப்பு; அவன் அதை லட்சியம் செய்யவில்லை.

***

‘ஓம்...ஓம், ஓம்...ஓம்’ என்று அந்தி பூஜைக்காக அடிக்கப்படும் ஆலய மணியோசை வெகு தூரத்திலிருந்து வந்து அவன் காதில் விழுந்தது. அதைத் தொடர்ந்து தங்கள் கூடுகளைத் தேடிச் செல்லும் பட்சி ஜாலங்கள், ‘கா, கூ’ என்று இரைந்தன.

அவன் கண் விழித்தான். சாயாதேவி காட்சி யளித்தாள். “நீ வேறு வந்து விட்டாயா!” என்று அவளைக் கண்டதும் சலித்துக் கொண்டான் அவன்.

“எனக்காகச் சலித்துக் கொள்ள வேண்டாம்; இதோ நான் போய்க் கொண்டே யிருக்கிறேன்!” என்று அவன் பார்த்துக் கொண்டிருக்கும்போதே, அவள் கொஞ்சம் கொஞ்சமாக மறைந்து கொண்டிருந்தாள்.

அவள் மறைவதற்குள் வேண்டா வெறுப்புடன் அன்ன விசாரத்தைத் தீர்த்துக் கொண்டு, பழையபடி மாடிக்கு வந்து விட்டான் அவன். "பாலைக் கூடவா அவள் எடுத்துக் கொண்டு வரமாட்டாள்?" என்று எண்ணியது, அன்றெல்லாம் ஏமாற்றத்துக்கு மேல் ஏமாற்றமாக அடைந்த அவன் மனம்.

அதே சமயத்தில் மனத்தை மயக்கும் மல்லிகைப் பூ மணம் 'கம்'மென்று வந்தது. அதைத் தொடர்ந்து அவளும் வந்தாள்!

சந்தேகமே யில்லை! அவள் நிசா தேவியும் அல்ல; உதய கன்னிகையும் அல்ல; சாயாதேவியும் அல்ல; அவள் அவளேதான்!

அவன் முகம் மலர்ந்தது; மனமும் உடத்தான்!

மெள்ள அவள் கையிலிருந்த பால் கூஜாவை வாங்கி ஒரு பக்கமாக வைத்துவிட்டு, "நல்ல வேளை! இப்பொழுதாவது வந்தாயே!" என்றான் அவன்.

"என்னை யாராவது பார்க்கிறார்களோ இல்லையோ, எனக்கென்னவோ எல்லோரும் என்னையே பார்த்துக் கொண்டிருப்பது போல் தோன்றுகிறது! அதனால்தான் பகலில் தங்களைச் சந்திப்பதற்கு என்னவோ போல் இருந்தது; இரவை எதிர்நோக்கி இவ்வளவு நேரம் காத்திருந்தேன்!" என்று சொல்லி, அவள் நாணிக் கண் புதைத்துக் கொண்டாள்!

"அந்த இரவு என்றும் வாழட்டும்!" என்று வாழ்த்திய அவன், அடுத்த நிமிஷம் அவளுடைய அரவணைப்பில் தன்னை மறந்து கண்ணை மூடினான்.

'களுக்' என்ற சிரிப்பொலி அவன் காதில் விழுந்தது.

கண்ணைத் திறந்து பார்த்தான். அவனுக்கு எதிரே நின்று கொண்டிருந்த நிசாதேவி, "இப்பொழுது என்ன சொல்கிறாய்? நான் உன்னையும் இந்த உலகத்தையும் விட்டு உடனே தொலைந்து போகட்டுமா?" என்று கேட்டாள்!

அவ்வளவுதான்; கன்னங் கரேலென்று இருந்த அவள் இரு கரங்களையும் விடாப் பிடியாகப் பற்றிக் கொண்டு, "வேண்டாம், வேண்டாம்! நீ எப்பொழுதும் என்னையும் இந்த உலகத்தையும் விட்டுத் தொலைந்து போகவே வேண்டாம்!" என்று கெஞ்சு கெஞ்சு என்று கெஞ்சினான் அவன்.

'கலகல' வென்று நகைத்தாள் அவள்; அர்த்தம் நிறைந்த அந்த நகைப்பிலே, வெட்கித் தலை குனிந்தான் அவன்!

# பாரதியார் மண்டபப்



## பாரதி விழாவில் பட்டிக்காட்டான்!

பாரதி மண்டபத் திருநாளாம் — தம்பி
பார்க்கப் பலபேரும் கூடுறாங்கோ ;
தீரராம் ராசாஜி திறக்குறாராம்—வங்க
தேசத்துக் கவர்னரா யிருக்குறாராம்.

எத்தனை தொண்டர்கள் நிக்கிறாங்கோ — அங்கே
ஏதேதோ எல்லாம் பேசுறாங்கோ
மெத்த நம்வயிறு நிறைந்திடவே — நல்ல
மேலான விருந்துக செய்யறாங்கோ.

போலீசும் ஆபீசும் கூடிக்கிடக்குது
போக இடமில்லை மோட்டார் பஸ்ஸு
கோலாகலமெல்லாம் பார்த்தேன் தம்பி — எங்க
பாட்டங்க செய்திட்ட புண்ணியந்தான்!

பாட்டு மத்தளங்கள் கேட்குதங்கே — தம்பி
பார்க்கப் பார்க்கத்தான் சொக்குதங்கே
போட்டோப் படங்கள் எடுக்கிறாங்கோ — அங்கே
போன இடமெல்லாம் கூட்டம் தம்பி!

பந்தல் அலங்காரம் பச்சிலைத் தோரணம்
பார்க்கப் பத்தாயிரம் கண்கள் வேணும்
பஞ்சமென்றே எங்கும் சொல்லுறாங்கோ — ஆனா
பாரதி நாளிலே பஞ்சமில்லே!

பத்துத் தினத்துக்கு ஒருதடவை — இந்த
பாரதி திருவிழா வந்து விட்டால்
மெத்தப் பயந்திடும் பஞ்சமெல்லாம் — நம்மை
விட்டு விலகியே ஓடிடாதோ!

வி. சிருத்தன், தலைவர், பாரதி இளைஞர் சங்கம், தெக்கலை

## வாழ்க கலைக்கோயில்!

மறைவாக அடுப்பூதி உறைந்திட்ட பெண்டிர்
மறமிக்க களமீது போராட வந்து
மறுநாட்டுப் பழிகாரர் மிருகாட்சி போக்க
மகிழ்வோடு சுவர்ணக் கொடிக்கீழில் நின்று
சிறைவாழ்வை என்றென்றும் நிறைவோடு பெற்றார்
சீரான சுயராஜ்யப் பெருவேள்வி செய்யப்
பறைசாற்றித் தமிழ்நாட்டில் கனல்மூட்டி வைத்த
பாரதியின் பெயர்சூடும் கலைக்கோயில் வாழ்க!

'அரங்', கவிக் கன்னி நிலையம், தக்கலை, தென் திருவிதாங்கூர்.

# பாராட்டுப் பாடல்கள்

★

## பாரதி மண்டபம் பாரீர்!

பல்லவி

பாரதி மண்டபம் பாரீர் — அதைப்
பார்த்து மகிழ்ந்து வியந்திட வாரீர்!

சரணங்கள்

தேன் இனிக்குந் தமிழ் மொழியில் — இந்து
தேசம் விடுதலை பெற்றிட வென்று
ஊரினிக்க உளம் இனிக்க — பாடும்
உண்மைக் கவிவாணர் சுப்பிர மணிய (பா)

குழந்தைக் குமரர் கிழவர் — யாரும்
கூடிப் படித்துமார் தட்டி முன்வரவே
பழந்தமிழ்க் கவிபல பாடி — நம்மைப்
பாரினில் வீரராய்ச் செய்த கவிஞர் (பா)

தென்னாட்டுக் காந்தி யென்பார்கள் — ராஜாஜி
சீரிய அரசியல் ஞானி யென்பார்கள்
அந்நாட்டுக் கவர்னர் என்பார்கள் — அன்னார்
அஸ்திவாரம் போட்ட சுப்பிர மணிய (பா)

தீர்க்க தரிசி ராஜாஜி — தீண்டாமைத்
தீய மதுவரக் கன்மாண் டிடவே
மார்க்கம் சொன்ன நம் தலைவர் — சிறந்த
மாண் கவி வாணராம் சுப்பிர மணிய (பா)

கு. மு. வேலாயுதபாணி, எம். எல். ஏ. (அரசியல் நிர்ணய சபை அங்கத்தினர்.)

## அற்புதங்கள் நான்கு!

நாட்டினிலே இனியதமிழ் நாட்டைப் போல
நவநவமாய்த் தெள்ளமுத ஊற்றெடுக்கும்
பாட்டினிலே பாரதியார் பாட்டைப் போலப்
பாமரரும் முத்தமிழைப் பார்த்தே கற்க
ஏட்டினிலே எழுதரிய எழில் பொருந்தி
எழுந்துயர்ந்த பாரதிமண் டபத்தைப் போல
காட்டிநிற்க உவமையிலா ராஜா ஜீபோல்
கண்டதுண்டோ அற்புதங்கள் நாலுந் தானே!

வெண்பா

பாட்டெல்லாம் பாரதியின் பாட்டாமா? அஃதொருகால்
கேட்டசெவி மற்றொன்றைக் கேட்குமா? — நாட்டினிலே
பேசுமொழி பலவும் பைந்தமிழா மா? இனியே!
கூசாம லேயெடுத்துக் கூறு!

ச. க. கிருஷ்ணசாமி, பெரணம்பாக்கம்.

நேரிசை வெண்பா

இற்றைத் தமிழர் இதயம் கவர்வதுடன்
எற்றைக்கும் நின்றே இலகுமே — பற்றிவளர்
வீரரசம் ஓங்கும் வியன்சுப் பிரமணிய
பாரதியார் அற்புதப்பொற் பா.

திராவிடக் கவிமணி வே. முத்துசாமி ஐயர், எம். ஏ., எல். டி.

# பாரதி நினைவு மலர்



★ ★ ★

தமிழ் நாட்டுக்கும் தமிழ் மக்களுக்கும் புத்துயிர் அளித்த மகாகவி பாரதியாரின் பாடல்கள் உயர்ந்த ஆர்ட் காகிதத்தில் அற்புதமான வர்ண சித்திரங்களுடன் அச்சிடப்பட்டிருக்கின்றன.

கண்ணுக்கும் உள்ளத்துக்கும் அரிய விருந்து.

தனிப் பிரதி விலை ரூ. 3—0—0

தபால் செலவுடன் ரூ. 3—8—0

**விலாசம்: மானேஜர், "கல்கி" கீழ்ப்பாக்கம், சென்னை**

★ ★ ★

# அழைத்தவர் யார்?

எஸ். வி. எஸ்.

"ஒரு வைரக் கல் பதித்த மோதிரமும் கைக் கடியாரமும் வாங்கித் தருவதானால்தான் இந்த வருஷம் மாப்பிள்ளை தலை தீபாவளிக்கு வருவார்!" என்று கம்பியில்லாத் தந்தி மூலம் செய்தி வந்தது. அந்தச் செய்தியை அந்த ஊரிலிருந்த சம்பந்தருந்த வட்டாரங்கள் ஊர்ஜிதப்படுத்தின. கோமதியின் தந்தை ரகுநாதய்யரின் மனசை அது ஒரு கலக்கு கலக்கி விட்டது.

வைர மோதிரமும் கைக்கடியாரமும் வாங்கவேண்டுமென்றால் குறைந்தது ஒரு ஐந்நூறு ரூபாயாவது வேண்டும். அதைத் தவிர்த்து, ஒரு தீபாவளிச் செலவுக்கு நூறு ரூபாயாவது வேண்டும். இதற்கெல்லாம் பணத்துக்கு எங்கே போவது?

ரகுநாதய்யர் என்னவெல்லாமோ யோசனை செய்து பார்த்தார். யாரைக் கடன் கேட்பது என்று யோசித்துப் பார்த்தார். தனக்குத் தெரிந்தவர்கள் அத்தனை பேரிடமும் அவர் கடன் வாங்கியாகிவிட்டது. ஆகவே அவருக்குக் கடன் கொடுப்பார் யாருமில்லை!

நகை நட்டை விற்றுப் பணம் திரட்டலாம் என்றாலும் அதற்கும் வழியில்லை! ஏனெனில், அவ்வளவு நகையும் ஏற்கெனவே மார்வாடிக் கடையில் அடகு வைக்கப்பட்டிருந்தன!

இப்படி யோசித்து யோசித்து நாட்கள் ஓடின. தீபாவளி நெருங்கியது. ஒருவழியும் தோன்றாமற் போகவே, ரகுநாதய்யர் மாப்பிள்ளையை வரச் சொல்லி, சம்பந்தி வீட்டுக்காரருக்குக் கடிதம் எழுதவில்லை.

தந்தையின் மன வருத்தத்தைக் கண்டு கோமதி கண்ணீர் வடித்தாள். அவளுக்கு என்ன சொல்லுவது, என்ன செய்வது என்று ஒன்றும் தோன்றவில்லை. தன் விதியை நொந்து கொண்டாள்.

ஆனால் அவர்கள் எதிர்பார்த்ததற்கு விரோதமாக, தீபாவளிக்கு முதல் நாள் ஓர் அதிசயமான சம்பவம் நிகழ்ந்தது. அதாவது, மாப்பிள்ளை யாரும் அழைக்காமலே தீபாவளிக்கு வந்து சேர்ந்தார்.

"அப்பா, அம்மா யாரும் வருவதற்குச் சௌகரியப் படவில்லை. என்னை மட்டும் போய் வரச் சொன்னார்கள்!" என்று சொல்லிக்கொண்டே, அவர் ஒரு தாம்பாளத்தில் வெற்றிலை, பாக்கு, குங்குமம், மஞ்சள், மலைப்பழம், சாத்துக்குடி எல்லாம் வைத்து, அத்துடன் ஒரு நூறு ரூபாய் நோட்டும் வைத்து அந்தத் தாம்பாளத்தை மாமனாரிடம் நீட்டினார்!

ரகுநாதய்யருக்கு ஒன்றும் புரியவில்லை. அவருடைய கண்களில் கண்ணீர் கசிந்தது. அதை மாப்பிள்ளை பார்த்தும் பார்க்காததுபோல் போய் விட்டார்.

கோமதியின் பெற்றோர்கள், "சம்பந்தி அகத்துக்காரர்களைப் பற்றி நாம் எவ்வளவு



லஞ்சம் கொடுக்க வந்தவர் :—என்ன ஸார். போன வருஷம் 1000 ரூபாய்தான் லஞ்சம் கொடுத்தேன்: இந்த வருஷம் அது போதாது என்று 2000 கேட்கிறீர்களே!

மானேஜர் :—என்ன ஸார், கால நிலைமை தெரியாமல் சொல்கிறீரே! விலைவாசி எல்லாம் ஏறிக் கிடக்கிறதினால்தானே அதையும் உயர்த்தும்படி நேர்ந்தது!

நவராக நினைத்து விட்டோம்? இந்த ஊர்க்காரர்களே மகா அயோக்கியர்கள்! இல்லாததையும் பொல்லாததையும் கட்டி விடுபவர்கள்! அவர்களுடைய பெருந்தன்மை என்ன, யோக்கியதை என்ன.. ...!" என்று வாயார மனமாரப் புகழ்ந்து கொண்டிருந்தார்கள்.

மாப்பிள்ளை எதிர் மரியாதைக்காக வைத்த நூறு ரூபாயைக் கொண்டே, அவருக்கும் பெண்ணுக்கும் ரகுநாதய்யர் ஜவுளி எடுத்து விட்டார்.

மறுநாள் விடியற்காலை மங்கள ஸ்நானம் செய்து, புதுப்புடவையையும் புது வேஷ்டியையும் புதுத் தம்பதிகள் உடுத்திக் கொண்டார்கள். மத்தியானம் எல்லோரும் சந்தோஷமாக விருந்தும் சாப்பிட்டார்கள்!

சாயங்காலம் மாப்பிள்ளை ஊருக்குப் புறப்படும்போது கோமதியுடன் உரையாட அரை மணி நேரம் அவகாசம் கிடைத்தது.

"என்ன கோமதி......!" என்றார் மாப்பிள்ளை.

"இவ்வளவு பெரிய மனசு வைத்து வந்தீர்களே! அதற்கு நான்......" என்று சொல்லிக்கொண்டு வந்தபோதே கோமதியின் நாத் தழுதழுத்தது. கண்களிலிருந்து நீர் பொல பொல வென்று உதிர்ந்தது.

"நீ எழுதிய அந்தக் கடிதத்தைக் கண்டும் ஒருவன் வராமலிருப்பானா!" என்று சொல்லி, கோமதியின் கடிதத்தை எடுத்து நீட்டினார் மாப்பிள்ளை.

நமஸ்காரம்.

கலியாணத்தின்போது பார்த்த தங்களை மறுபடியும் நம் தலைதீபாவளியின்போது பார்க்கலாம் என்று எண்ணிக்கொண்டிருந்தேன். ஆனால் என் ஆசை நிறைவேறாதுபோலிருக்கிறது. எங்கள் வீட்டுப் பொருளாதார நிலை தங்களை அழைத்து வேண்டிய உபசாரம் புரிய உதவவில்லை. இதைத் தங்களிடம் தெரிவிக்கக்கூட என் மனசு கூசுகிறது.

எனினும், எங்கள்மேல் கோபித்து என்னையும் மறந்துவிடுவீர்களோ என்ற பயத்தினால் ஒரு கடிதமாவது எழுதி வைப்போம் என்று இதை எழுதுகிறேன்.

இந்தக் கடிதம் 'என்னை மறந்து விடாதீர்கள்!' என்று தங்களைக் கேட்டுக்கொள்ளச் சக்தியற்றது; கண் நிறைந்த என் கணவரை மனம் நிறைய ஒரு முறை பார்க்க நான் எவ்வளவு ஏங்கிக் கொண்டிருக்கிறேன் என்பதை எடுத்துச் சொல்ல இந்த அசட்டுக் கடிதத்துக்குத் தெரியவே தெரியாது!

இந்தக் கடிதம் 'என்னை மறக்கவேண்டாம்' என்று தங்களுக்குச் சொல்லா விட்டாலும், தாங்களாவது இந்த அசட்டுக் கடிதத்தை மறக்க வேண்டாம் என்று நான் கேட்டுக் கொள்ளுகிறேன்.

அன்புள்ள,

கோமதி.

"கோமதி! இந்தக் கடிதத்தைப் படித்து முடித்ததும் நான் அப்பாவை மறந்தேன்; அம்மாவை மறந்தேன்; அவர்களுடைய அனுமதியின்றி நான் தீபாவளிக்கு வந்தால் எவ்வளவு பெரிய கோபத்துக்கு ஆளாவேன் என்பதையும் மறந்தேன். ஆனால், யாரை மறந்தாலும் உன்னை மறக்க முடியாமல் சிரமப்பட்டேன். அதைவிட உன் அசட்டுக் கடிதத்தை மறப்பது என்னால் முடியாத காரியமாயிருந்தது. அதை நூறு தடவை திருப்பித் திருப்பிப் படித்தேன். அதுவும் போதாமல் உன்னை நேரில் பார்க்காமல் இருக்க முடியாது என்று உடனே புறப்பட்டு வந்தேன்!" என்று உணர்ச்சியுடன் கூறி, கோமதியிடமிருந்து விடை பெற்றுக் கொண்டார் மாப்பிள்ளை.

தன் பார்வையிலிருந்து மறையும் வரை, அவரையே இமை கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தாள் கோமதி.



***

ஒருவர் (கூட்டத்தை விட்டு வெளியே வந்து):— நீங்கள் இரண்டு பேரும் தெலுங்கில் சண்டை போடுவது புரியாமல் எல்லோரும் தவிக்கிறார்கள்; தயவு செய்து கொஞ்சம் தமிழில் சண்டை போடுங்களேன்!

***

# காந்தித் தாத்தாவுக்குக் கடிதம்

தீபாவளியும் வந்திடுச்சு,
தின்பண்டங்க செஞ்சாச்சு,
பாவாடையும் தைச்சாச்சு,
பாடிசட்டை வாங்கியாச்சு.

அப்பாவுக்குக் கதராடை
அம்மாவுக்குக் கதர்ப்புடவை
அம்பிதங்கை அண்ணனுக்கும்
அடுக்காய்க் கதர்த்துணி வாங்கியாச்சு.

அத்திம்பேரும் வந்துவிட்டார்
அக்கா கும்மாளம் அடிக்கிறான்
சத்தம்போட்டு எல்லாருமே
சந்தோஷமா யிருக்கிறார்கள்.

வெடிமத்தாப்பு வாணமெல்லாம்
விதவிதமாய் வாங்கியாச்சு,
அடிக்கொருதடவை அக்காளும்
அழகுசெய்து கொள்ளுகிறாள்.

காந்தித்தாத்தா உங்களுக்கு
கதர்த்துணிச்சட்டை அனுப்பட்டுமா?
பூந்திலாடு பலகாரம்
பூத்திரிவாணம் அனுப்பட்டுமா?

என்னமோ மணிப்பயல் எழுதிவிட்டான்
என்றுநீங்கள் நினைக்காமல்
சின்னப்பயலை மதிக்கவேணும்
சீக்கிரம் பதிலும் போடவேணும்.

— எம். அருணாசலம்.












* ஷிரீன்:
தாஜ்மீது
வெண்ணிலா...
நிர்மல வதனம்

ஷிரீனே *அவளது அழகு! அவள் பாண்ட்ஸ் உபயோகிக்கிறாள்!

உங்கள் சருமத்திற்கு நீங்கள் விரும்புவது இயற்கைத் தைலங்கள் தான் இல்லையா? வதனத்தை அன்றலர்ந்த மலரென விளங்கச் செய்ய நறுமணங்கமழும், மெல்லிய பாண்ட்ஸ் கோல்ட் க்ரீமையும், வானிஷிங் க்ரீமையும் பரீட்சியுங்கள். எங்குமே எழில் நங்கையர்கள் பாண்ட்ஸையே உபயோகிக்கின்றனர்.

# பாண்ட்ஸ் க்ரீம்ஸ்

பாண்ட்ஸ் தினசரிமுறை




பாண்ட்ஸ் கோல்ட் க்ரீம்: தினம் இரண்டுவேளை விரல் நுனிகளால் கோல்ட் க்ரீம் மெதுவாகத் தடவி, முகத்தை செம்மையாகச் சுத்தம் செய்யுங்கள். பாண்ட்ஸ் டிஷ்யூவால் துடைத்துக் கொள்ளவும்.




பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம்: பின்பு வானிஷிங் க்ரீம் தடவுங்கள். அது சருமத்தினுள் மறைந்தொழிந்து—சருமத்திற்கு பாதுகாப்பளிக்கிறது.




பாண்ட்ஸ் பௌடர்: பின்னர் வேண்டுமானால் கொஞ்சம் பௌடரும் தடவிக் கொள்ளுங்கள். முகம் புதிதுபோன்ற மோகன காந்தியுடன் விளங்கும்.

வியாபார விவரங்களுக்கு: எல். டி. ஸெய்மூர் & கோ. (இந்தியா) லிட்.
பம்பாய் - கல்கத்தா - கராச்சி - சென்னை.

# சுதந்திர தீபாவளி - அலங்கார ஆடைகள்

2000 டிசைன்களில் பட்டுச் சேலைகள் 500 டிசைன்களில் பெங்கால் சில்க் சேலைகள்
4000 டிசைன்களில் நூல் சேலைகள் 1500 டிசைன்களில் வேஷ்டிகள், அங்கவஸ்திரங்கள்

முதல் சுதந்திர தீபாவளியை அமோகமாக கொண்டாடும் பொருட்டு சமயமான கண்கவர் கலர்களில், ஸ்பெஷலாக உத்திரவாதமான சாயம் போட்டு ஆரணி, காஞ்சீபுரம், பெனாரஸ், பெங்கால், பெங்களூர், கொள்ளேகாலம், கோயமுத்தூர், உறையூர், மதுரை, சேலம் முதலிய ஊர்களில் திறமை வாய்ந்த நெசவாளர்களால் நிபுணர்களின் மேற்பார்வையில் நெய்யப்பட்டு அற்புதமான பார்டர்கள் அழகிய முந்திகளுடன் வந்து குவிந்து கொண்டிருக்கின்றன. விதவிதமான பிரிண்டட் சேலைகளும், சீட்டிகளும் சகாயமான விலையில் ஏராளமாக வந்துள்ளன.

உயர்தரமான சார்ஜட் சேலைகள் ஸில்க் பீஸ்கள், ஸில்க் ஷர்ட்டிங், கோட்டிங், வெல்வெட், சாட்டின் முதலிய பலவித பட்டு தயாரிப்புகள் பல கலர்களில் வந்துள்ளன.

**சேலைகள் 5 கெஜம் முதல் 10 கெஜம் வரை**

அசல் பட்டுச் சேலைகள் ரூ. 17-0-0 முதல் ரூ 700-0-0 வரை
நூல் சேலைகள் ரூ. 7-0-0 முதல் ரூ. 70-0-0 வரை
வேஷ்டிகள், டவல்கள், அங்கவஸ்திரங்கள் ரூ. 1-0-0 முதல் ரூ. 100-0-0 வரை

மலிந்த விலைகளில் விற்பனை செய்கிறோம்

ரூ. 5,00,000 பெறுமான புதிய ரகங்கள் வந்துள்ளன

இன்றே வந்து பார்வையிடுங்கள்

# கஸ்தூரிபாய் கம்பெனி

உயர்தரப் பட்டு, நூல் ஜவுளி வியாபாரிகள்
மேல வீதி :: சிதம்பரம்

---

## நமச்சல், வலி
## பித்த வெடிப்பு கொண்ட காலை
### விரைவில் ஆற்றி சொஸ்தப்படுத்துகிறது



கோடிக் கணக்கானவர்களின் பாதங்களை ஜாம்பக் சொஸ்தப்படுத்துகிறது. வலியைப் போக்குகிறது. வெக்காடையும், வீக்கத்தையும் தவிர்க்கிறது. பித்த வெடிப்பினால் முரடாகும் பாதத்தை மிருதுவாக்குகிறது. உடைந்து போன குமிப் புண் மேல் தடவினால், ஜாம்பக் அதில் ஏற்படும் கசிவைத் தடுத்து, விரைவில் குணப்படுத்துகிறது. சருமத்தில் ஏற்படும் வியாதி, காயம், படை, எக்ஸிமா, சொரய்ப்பு, பரு, வலி முதலியவைகளுக்கு ஜாம்பக் மிகவும் சிறந்தது.




# Zam-Buk

உலகப் பிரசித்திப் பெற்ற மூலிகைக் களிம்பு
மிருதுக் கொழுப்பின்மைக்கு உத்தரவாதம்

ஏஜண்டுகள் :—மெஸர்ஸ். தாதா & கோ., பி. டி. மதராஸ்




# சந்திரஹாரம்

ஆசிரியர்: பிரேமசந்த்
மொழி பெயர்ப்பு: ரா. வீழிநாதன்

## இருபத்தெட்டாம் அத்தியாயம்

### கண்ணீர் சிரித்தது!

ரமாகாந்த் ஊரை விட்டு ஓடிப்போனதிலிருந்து ரத்தன், பத்மாவின் விஷயத்தில் இன்னும் அதிக அக்கறை செலுத்தினான். அவன் பத்மாவுக்கு எந்த விதத்திலாவது உதவி செய்து கொண்டேயிருக்க விரும்பினான். ஆனால் அதைப் பத்மா தெரிந்து கொள்ளக் கூடாது என்பது அவனுடைய அபிப்பிராயம். ரமாகாந்தைத் தேடும் விஷயத்தில் அவன் தன் கைப் பணத்தைக் கூடத் தயங்காமல் செலவழிக்கத் தயாராயிருந்தான். பத்மாவின் துயரம் தோய்ந்த முகத்தைப் பார்க்க அவன் மிகவும் மனவேதனைப்பட்டான். எப்பொழுது பார்த்தாலும் பத்மா சிரித்த முகத்துடனேயே காட்சி அளிக்க வேண்டும் என்பது அவனுடைய அந்தரங்க ஆசை. ரத்தன் இருள் அடர்ந்து அழுது வடியும் தன் வீட்டில் இருப்புக் கொள்ளாமல் அடிக்கடி பத்மாவின் வீட்டுக்கு வந்து விடுவான். பத்மாவுடன் பேசிக் கொண்டிருந்தாலே அவனுக்குத் தன் மனச் சுமை குறைந்து விட்டது போல் தோன்றும். ஆனால் இப்பொழுதோ, பத்மாவின் வீடுமல்லவா அழுது வடிய ஆரம்பித்து விட்டது! பத்மாவின் வீட்டுக்கு வந்தால்தான் ரத்தனுக்கு, 'நாமும் உலகத்தில்தான் இருக்கிறோம்; வாழ்வு, ஆசை, அன்பு, இன்பம், விநோதம் முதலியவை நிரம்பிய உலகத்தில்தான் இருக்கிறோம்' என்ற பெருமிதம் ஏற்பட்டு வந்தது. ஏனெனில் அவனுடைய சொந்த வாழ்க்கைதான் கட்டுப்பாடுகள் நிறைந்த விரதம் என்னும் யாக குண்டத்துக்கு அர்ப்பணமாகி விட்டதே!

ரத்தனுக்கு அந்த நகரத்தில் உள்ள எத்தனையோ பெரிய பெரிய பணக்காரக் குடும்பங்களையெல்லாம் தெரியும். அவன் அடிக்கடி அவர்களுடைய வீடுகளுக்கெல்லாம் போக்கு வரத்துக்கூட வைத்துக் கொண்டிருந்தான். அந்தப் பெரிய இடங்களில் எல்லாம் ஆடம்பரம், உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுதல், பொறாமை, பூசல், கேலி, பிறரை நிந்தித்தல் முதலியவைதான் மலிந்து கிடந்தன. கிளப்புகளும் அதே மாதிரியாக இருந்ததால் அவன் அங்கே போய் வருவதையும் குறைத்துக் கொண்டுவிட்டான். அங்கே வேடிக்கை, விளையாட்டுக்கும், பொழுது போக்குவதற்குமான சாதனங்கள் யதேஷ்டமாக இருந்தன. அதைப் போலவே ஆண்களின் ஆதரம் தோய்ந்த கண்கள்,

உடைந்த உள்ளங்கள், மோக வெறி மேலிட்ட சொற்கள் முதலியவைகளும் அமோகமாகக் காணக் கிடைத்தன. பத்மாவின் வீட்டிலோ அந்தக் கண்ணராவிக் காட்சிகள், வெளிப் பகட்டுகள் முதலியவைகள் இல்லை. அருமை, பொறுமை முதலிய பித்தலாட்டங்களும் அங்கே தலைகாட்டவில்லை. ரமாநாத் இளம் பிராயத்தினன்; அழகன்; ரசிகனும் கூட. ஆனால், அவன் விஷயத்தில் சந்தேகக் கண் கொண்டு பார்க்க வேண்டிய பிரமேயமே ரத்தனுக்கு இதுவரை ஏற்படவில்லை. பத்மாவைப் போன்ற அழகி அவனுக்கு மனைவியாக வாய்த்திருக்கும் பொழுது அதற்கெல்லாம் இடம் ஏது? மோசக் கருத்துக்களுக்கும் ஏமாற்று வித்தைகளுக்கும் பெயர்போன ஆட்களிடமிருந்து தப்பித் தன் வாழ்க்கையை நிம்மதியாக நடத்த விரும்பிய ரத்தன், சாந்தம் குடிகொண்ட பத்மாவின் வீட்டைத் தஞ்சம் புகுந்தாள். யாருடைய போதாத காலமோ, அதற்கும் அல்லவா இப்போது ஆபத்து வந்துவிட்டது!

ஒரு நாள் ரத்தன் கிராமபோன் பெட்டி கொண்டு வந்து பத்மாவுக்கு இசைத்தட்டு வைத்துக் காட்டினாள். இன்னொரு நாள் ஒரு கூடை திராட்சைப் பழம் கொண்டு வந்து கொடுத்தாள். அவள் வரும்பொழுதெல்லாம் பத்மாவுக்காக ஏதாவது வாங்கி வராமல் இருப்பதில்லை. முன்பெல்லாம் அவள் ஜாகேசுவரியைக் கண்டால் அதிகமாகப் பேசுவது இல்லை. இப்பொழுதெல்லாம் அவள் ஜாகேசுவரியின் அருகில் போய் உட்கார்ந்து கொண்டு 'லோகாபிராமமாக' ஏதாவது பேசுவது உண்டு. சிற்சில சமயம் அவளுடைய தலைக்கு எண்ணெய் தடவிச் சீவி விடுவதும் உண்டு. கோபிநாத்தினிடமும் விசுவம்பரநாத்தினிடமும் அவளுக்கு இப்பொழுது அலாதிப் பற்றுதல் ஏற்பட்டு விட்டது. அவள் சில சமயம் அவர்களைத் தன் காரில் ஏற்றிக் கொண்டு உலாவப் போவதும் உண்டு. பள்ளிக்கூடம் விட்டதும் நேரே இருவரும் அவளுடைய வீட்டுக்குச் சென்று கொட்டம் அடிப்பார்கள். ரத்தனுக்கு அதைப் பார்க்க உள்ளூற ஒரு தனி ஆனந்தம் ஏற்படும். வக்கீலும் ரமாநாத்தின் குடும்பத்தைப் பற்றி அடிக்கடி வெகு அக்கறையுடன், "ரமாநாத பாபுவிடமிருந்து ஏதாவது கடிதம் கிடிதம் வந்ததா? அவர் எங்கேயிருக்கிறார் என்றாவது தெரிந்ததா? அவருடைய வீட்டார்களுக்கு யாதொருவிதமான கஷ்டமும் இல்லையே!" என்று கேட்டுத் தெரிந்து கொள்ளுவது உண்டு.

ஒரு நாள் ரத்தன் மிகவும் வாட்டமுற்ற முகத்துடன் பத்மாவின் வீட்டுக்கு வந்தாள். அவளுடைய கண்கள் சார்ந்திருந்தன. பத்மா அவளைப் பார்த்ததும், "உனக்கு உடம்பு சரியாயில்லையா, என்ன?" என்று கேட்டாள்.

ரத்தன் வருத்தம் தோய்ந்த குரலில், "எனக்கு உடம்புக்கு ஒன்றும் இல்லை. நேற்று இராத்திரி பூராவும் கண் விழிக்கும்படியாகிவிட்டது. ஏனென்றால் அவர் ரொம்பக் கஷ்டப்பட்டுப் போய் விட்டார். அவருக்கு இழுப்பு வியாதியோ இல்லையோ, இந்தக் குளிர் காலத்திலும் அந்த வியாதிக்கும் ரொம்பக் கொண்டாட்டம் போலிருக்கிறது. அவரும் 'எமல்ஷன்', 'சனடோஜன்' என்று என்னவெல்லாமோதான் சாப்பிட்டுப் பார்க்கிறார். ஆனால் அந்தப் பாழும் வியாதி அவரை விட்டு அகன்றால்தானே! கல்கத்தாவில் ஒரு வைத்தியர் இருக்கிறாராம். அவர் ரொம்பக் கெட்டிக்காரர் என்று கேள்வி. அவரிடம் கொண்டு போய்க் காட்டலாம் என்று எண்ணியிருக்கிறோம். நாளைக்கே நாங்கள் புறப்பட்டுப் போகிறோம். 'நீ வந்து வீணாக ஏன் கஷ்டப்பட வேண்டும்? வேண்டாம்' என்றுதான் அவர் சொல்லுகிறார். இருந்தாலும் எனக்குத்தான் மனது கேட்கவில்லை. பேச்சுத் துணைக்கு யாராவது ஒரு ஆள் வேண்டாமா? நீயே சொல்லு. நான் இரண்டொரு தடவை கல்கத்தாவுக்குப் போயிருக்கிறேன். என் உடம்புக்கு அந்த ஊர் ஒத்துக் கொள்ளவே யில்லை. ஜுரம் வந்து விட்டது. இருந்தாலும் இந்தச் சமயத்தில் நம் சுகமா முக்கியம்? அவருடைய உடம்பை யல்லவா ஜாக்கிரதையாகக் கவனித்தாக வேண்டும்? இந்தக் கஷ்டத்தையெல்லாம் நினைத்துப் பார்க்கும்பொழுது, 'விஷத்தைத் தின்று உயிரை விட்டு விட்டால் என்ன?' என்று கூடத் தோன்றுகிறது. ஈசுவரன் என்னை ஏன்தான் இப்படிச் சோதிக்கிறாரோ? எனக்குச் சொத்து சுதந்திரம் என்று ஒன்றுமே வேண்டாம். எல்லாவற்றையும் யாராவது எடுத்துக்கொண்டு அவருடைய உடம்பைக் குணப்படுத்தினால் போதும்" என்றாள்.

பத்மா, "ஆமாம், இங்கே யாராவது வைத்தியரைக் கூப்பிட்டுக் காட்டினாயா?" என்று கவலையுடன் கேட்டாள்.



"இங்கே யிருக்கிற வைத்தியர் ஒருவரைக் கூட விடவில்லை. எல்லாரிடமும் காட்டியாகி விட்டது. ஆனால் குணமாகும் வழியைத்தான் காணோம்."

"கல்கத்தாவி லிருந்து எப்பொழுது திரும்புவாய்?"

"அது அவருடைய உடம்பு குணமாவதைப் பொறுத்திருக்கிறது. ஒரு வாரத்தில் வந்தாலும் வந்துவிடுவேன். ஒரு மாதம் இரண்டு மாதம் பிடித்தாலும் பிடிக்கும். ஆனால் ஒன்று மட்டும் நிச்சயம். அவருடைய வியாதி அறவே தீராத வரையில் நாங்கள் திரும்பி வரப் போவதில்லை" என்றான் ரத்தன்.

இதைக் கேட்டுத் திரை மறைவிலிருந்த விதி சிரித்துக் கொண்டிருந்தது. பத்மாவும் மனதுக்குள் லேசாகச் சிரித்துக் கொண்டான். இளமைப் பருவத்தில் தீராத இந்த வியாதி முதுமைப் பருவத்திலாவது தீரவாவது?

ஆனால் நல்லெண்ணத்துக்கு அனுதாபம் காட்டாமல் இருப்பது அநாகரிகமான செயல் அல்லவா? ஆகவே பத்மா, "அவருக்கு வியாதி குணமடைந்து நீங்கள் சீக்கிரமே திரும்பி வருவதற்குக் கடவுள் அருள் புரியவேண்டும்" என்றான்.

"நீயும் என்னுடன் வந்தால், எனக்குக் கொஞ்சமாவது மன ஆறுதலா யிருக்கும்" என்றான் ரத்தன்.

பத்மா மிகவும் மனமிளகினவனாய், "இந்தச் சமயம் நான் எப்படி வர முடியும், ரத்தன்? நீயே சொல்லேன். 'அவரைப் பற்றிய தகவல் ஏதாவது கிடைக்காதா.... கிடைக்காதா' என்று நான் ஏங்கிக் கொண்டிருக்கும் பொழுது, அங்கே வந்தால் எனக்கு இருப்புக் கொள்ளுமா?" என்று கேட்டான்.

"அவர் கல்கத்தாவில்தான் இருக்கிறார் என்று என் மனதில் ஏதோ ஒன்று சொல்லுகிறது."

"உனக்கு அவகாசம் இருக்கும்பொழுது எனக்காக அவரைத் தேடிப் பார்! எங்கேயாவது அகப்பட்டால் எனக்கு உடனே ஒரு கடிதம் எழுது."

"இதுகூட நீ சொல்லியா தரவேண்டும்? அவரைப் பற்றி ஏதாவது தகவல் கிடைத்தால் நான் உடனே ஒரு தந்தி அடித்து விட மாட்டேனா?"

"அடிக்கடி உன் அகத்துக்காரர் தேக சௌக்கியத்துக்குக் கடிதம் எழுதிக் கொண்டிரு, என்ன?"

"கட்டாயம் எழுதுகிறேன். நீயும் பதில் எழுதிக் கொண்டிரு, என்ன?" என்றாள் ரத்தன்.

பத்மா, ரத்தனின் நெற்றியில் குங்குமப் பொட்டு இட்டுவிட்டு, ஒரு தாம்பாளத்தில் வெற்றிலை-சீவல் வைத்துக் கொடுத்தாள். ரத்தன் அவளிடம் ஏதோ சொல்ல வேண்டும் என்ற நோக்கத்துடன் அவளையே உற்றுப் பார்த்தாள். ஆனால் சங்கோசம் காரணமாக அவளுடைய வாயிலிருந்து வார்த்தைகள் எழவே யில்லை. வெற்றிலை—சீவல் வைத்துக் கொடுக்கும்பொழுது, பத்மா அவளுடைய மனோ பாவத்தைப் புரிந்து கொண்டு விட்டாள். "என் ரத்தன், வேறு ஏதாவது விசேஷம் உண்டா?" என்றும் கேட்டாள்.

ரத்தன் மெதுவாக மென்று விழுங்கிக் கொண்டு, "இல்லை, ஒன்றும் இல்லை ...... வந்து ...... என்னிடம் கொஞ்சம் பணம் இருக்கிறது ...... என்னிடமிருந்தால் அது செலவழிந்து விடும். ஆகையால் நீ அதை வைத்துக் கொள்ளுகிறாயா?" என்று கேட்டாள்.

பத்மா சிரித்துக் கொண்டே, "என்னிட மிருந்தால் செலவழியாதோ?" என்றாள்.

"பணம் பின் எதற்கு இருக்கிறது? செல வழிப்பதற்குத்தானே?" என்றாள் ரத்தன்.

பத்மா யோசனையில் ஆழ்ந்து தரையையே உற்று நோக்கலானாள். வாய் திறந்து ஒன்றும் பதிலே சொல்லவில்லை. ரத்தன் அவளைக் குறை கூறும் பாவனையில், "நீ வாயைத் திறக்கவே காணோமே? இன்னும் நீ என்னை வேற்று மனுஷியாகவே தான் எண்ணுகிறாய் போலிருக்கிறது. நம்மிருவருக்குள்ளும் பலவிதமான வித்தியாச உணர்ச்சியும் ஏற்படக் கூடாது என்று நான் எண்ணுகிறேன். ஆனால் நீயோ விலகி விலகி ஓடுகிறாயே! அப்படித்தான் என்னுடைய ரூபாயிலிருந்து நூறு ஐம்பதை எடுத்து நீ செலவழித்து விடுகிறாய் என்று வைத்துக் கொள். அதற்காக என்ன, குடியா முழுகிவிடும்? நீயும் நானும் அக்காள்—தங்கை என்று ஆகிவிட்ட பிறகு, தம்பிடிக் கணக்கெல்லாம் பார்ப்பது நியாயமாகுமா?" என்றாள்.

பத்மா கம்பீரமான குரலில், "நீ தப்பாக எடுத்துக் கொள்ளாமல் இருந்தால், நான் உன்னை ஒன்று கேட்கிறேன்" என்றாள்.

"தப்பாக எடுத்துக் கொள்ளக் கூடிய விஷயமாக இருந்து விட்டால், கட்டாயம் தப்பாகத்தான் எடுத்துக் கொள்ளுவேன்."

"நான் உனக்கு மன வருத்தத்தை உண்டு பண்ண வேண்டும் என்ற நோக்கத்தில் இதைச் சொல்ல முன் வரவில்லை. நான் சொல்லுவது உனக்குக் கெடுதலாகப் பட்டாலும் படலாம். என்மீது நீ காட்டும் இந்த உறவுடன், 'என்மீது இரக்கம் காட்ட வேண்டும்' என்ற உணர்வும், உன்னை யறியாமலே கலந்திருக்கிறதா, இல்லையா? நிதானமாகச் சிந்தித்துப் பார். நீ என்னுடைய ஏழைமைக்காகத் தான் இரங்கி ......"

பத்மாவை மேலே பேச வொட்டாமல் தன் இரு கைகளாலும் ரத்தன் அவளுடைய வாயைப் பொத்தி விட்டாள். "போதும் அம்மா, போதும். தயவு செய்து வாயை மூடிக் கொள். நீ என்னைப் பற்றி என்ன வேண்டுமானாலும் எண்ணிக் கொள். ஆனால் நான் சத்தியமாகச் சொல்லுகிறேன். இதுவரை அம்மாதிரி எண்ணம் என் மனத்தில் எழுந்ததே யில்லை. எழவும் எழாது என்று எண்ணுகிறேன். என்னைப் பொறுத்தவரையில் பசித்தால், 'எனக்குப் பசிக்கிறது. ஏதாவது தின்னக் கொடு' என்று உன்னைக் கேட்க நான் கொஞ்சங் கூடத் தயங்க மாட்டேன்" என்றாள்.

பத்மா வாட்டி ததும்பிய குரலில், "இப்பொழுது உனக்குப் பதிலுக்குப் பதில் பன்மடங்கு அதிகமாகச் செய்யும் சக்தியிருக்கிறது. அதனால்தான் நீ இப்பொழுது இப்படிப் பேசுகிறாய். ஆனால் ஒரு பேச்சுக்குச் சொல்லுகிறேன்—கடவுள் உன்னை அந்த மாதிரி நிலைமையில் ஏழேழு ஜன்மத்துக்கும் வைக்க வேண்டாம்—நீ என்ன தான் சொல்லு, சோற்றுக்குத் தாளம் போடும் நிலைமைக்கு நீ வந்து விட்டால் கூடச் சங்கோசத்தை விட்டு விட்டு இரந்துண்ண உனக்கு மனமே வராது. இது நிச்சயம்" என்றாள்.

ரத்தன் திடமான குரலில், "அப்படிப் பட்ட நிலைமை ஏற்பட்டால் உன்னுடைய உதவியை நாடச் சிறிதும் தயங்கமாட்டேன். நிலைமைக் கேற்றவாறு மாறும் சுபாவம் உண்மையான நட்புக்குக் கிடையவே கிடையாது. அம்மாதிரியான சுபாவம் இருக்குமானால் அதை நட்பு என்று சொல்லுவதற்கு இல்லை. இம்மாதிரி நீ பேசுவதிலிருந்து, நீ என்னைப் புறக்கணிக்கப் பார்க்கிறாய் என்றுதான் தோன்றுகிறது. அது என் விதி! இதைத் தவிர நான் வேறென்ன சொல்ல முடியும்? எஞ்சிய வாழ்நாட்களை

உன்னுடன் கழிக்கலாம் என்று நான் பகற் கனவு கண்டு கொண்டிருந்தேன். 'மூடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப் படுவது போல் ஆசைப் படாதே' என்று நீ என்னை எச்சரிக்கிறாய். என்னைப் போன்ற துர்ப்பாக்கியவதிகளுக்கு அன்புப் பிச்சை கேட்டாலும் கிடைக்காது போலிருக்கிறது!" என்றாள்.

இதைக் கூறும்பொழுதே ரத்தனுடைய கண்களில் நீர் சுரக்க ஆரம்பித்து விட்டது. பத்மா இன்றுவரை தன்னைப் போலத் துக்கப்படுகிறவர்கள் வேறு யாருமே இந்தப் புவியில் கிடையாது என்று எண்ணிக் கொண்டிருந்தாள். 'துக்கப்படும் ஆத்மாக் களுக்கு அச்சம் தவிர்த்து உண்மை உரைக் கும் உரிமை உண்டு' என்ற தைரியத்தில் அவள் ரத்தனிடம் அப்படிச் சிறிதும் தயவு தாட்சண்யமின்றிப் பேசிவிட்டாள். ஆனால் பிறகுதான் அவளுக்குத் தான் படும் துயரத்தைக் காட்டிலும் ரத்தன் படும் துயரம் பன் மடங்கு அதிகமானது என்ற விஷயம் புரிந்தது. 'ஓடிப் போன கணவன் என்றைக்காவது ஒரு நாள் திரும்பி வந்து விட மாட்டானா?' என்ற ஒரு நம்பிக்கை யாவது பத்மாவுக்கு இருந்தது. அது மட்டும் அல்ல, அவளுடைய கணவன் இளம் பிராயத்தினன் வேறு. அவன் வீடு திரும்பி வந்ததும், பத்மா தன் பழைய கஷ்ட நஷ்டங்களை யெல்லாம் மறந்துவிடக் கூடும். அவளுடைய நம் பிக்கை யென்னும் சூரியனும் மறுபடியும் உதயமாவான். ஆசை யென்னும் மலர்கள் பூத்துக் குலுங்கத் தொடங்கிவிடும். ஆனால் ரத்தன், பாவம்! — அவனுடைய வருங் காலம்தான் ஒரே சூன்யமும் கும்மிருட் டாகவும் இருட்டிக் கிடந்ததே!

இதை நினைத்துப் பார்த்த பத்மாவின் கண்களிலும் நீர் சுரந்து விட்டது. அவள் எழுந்தவாறே கண்களைத் துடைத்துக் கொண்டு, "என் கடிதங்களுக்கு அடிக்கடி பதில் எழுதிக் கொண்டிரு. பணத்தையும் கொடுத்துவிட்டுப் போ!" என்றாள்.

ரத்தன் உடனே தன் பர்ஸைத் திறந்து அதிலிருந்து ஒரு நோட்டுக் கற்றையை எடுத்துப் பத்மாவின் முன்னிலையில் வைத் தான். ஆனால் அவளுடைய முகத்தில் மகிழ்ச்சி யென்பது பெயருக்குக்கூட இல்லை.

அதைக் கவனித்த பத்மா மிகவும் இனிமையான குரலில், "சொன்னதைத் தப்பாக எடுத்துக் கொண்டு விட்டாயா, என்ன?" என்று கேட்டாள்.

ரத்தன் கோபம் தொனிக்கும் குரலில், "தப்பாக எடுத்துக் கொண்டு, நான் உன்னை என்ன செய்துவிட முடியும்?" என்றான்.

பத்மா அவனுடைய கழுத்தில் கைகளைப் போட்டு அணைத்துக் கொண்டாள். அன் பின் காரணமாகப் பேச வொட்டாமல் அவளுக்குத் தொண்டையை அடைத்தது. அவளுக்கு இம்மாதிரிப் பிரியம் இதுவரை ரத்தன்மீது ஏற்பட்டதே யில்லை. அவ ளுடைய உள்ளத்தில் இவ்வளவு நாட்களும் ரத்தனைக் கண்டாலே ஒரு விதப் பொறாமை யும், கூடியவரை அவனுடன் சேராமல் தூர விலகி யிருக்க வேண்டும் என்ற எண்ணமும்தான் வேரூன்றி யிருந்தது. இன்றுதான் அவளுக்கு ரத்தனுடைய உண்மை யுருவம் விளங்கியது.

'உண்மையில் ரத்தன்தான் என்னைக் காட்டிலும் துர்ப்பாக்கியவதி' என்று பத்மா தன் மனத்துள் முணுமுணுத்துக் கொண்டாள்.

ஒரு கணத்துக்குப் பிறகு ரத்தன் கண் களில் கண்ணீரும் சிரிப்பும் ஒன்று சேரப் பத்மாவிடம் விடை பெற்றுக் கொண்டான். கண்ணீருக்கும் சிரிக்கத் தெரியும் போலும்!

## இருபத்தொன்பதாம் அத்தியாயம்

## ரத்தனைத் தேடுகிறாள்!

கல்கத்தாவில் வக்கீல் இந்துபூஷன் தங்குவதற்கென முன் கூட்டியே சகல ஏற்பாடுகளும் செய்தாகி விட்டது. ஆகை யால் அவர்களுக்கு அங்கே போய் இறங் கின பின் எவ்விதக் கஷ்டமும் ஏற்பட வில்லை. ரத்தன் தன்னுடன் வீட்டுச் சமையற்காரனையும், வேலைக்காரனையும் அழைத்துக் கொண்டு போயிருந்தான். அவர்கள் இருவரும் அநேக வருஷங்களாக வக்கீலின் வீட்டில் வேலை பார்த்து வந்த வர்கள். ஆகையால் அவர்களும் வீட்டு மனுஷ்யர்களாகவே பாவிக்கப்பட்டனர்.

பட்டணத்துக்கு வெளியேயுள்ள ஒரு பங்களாவில், அவர்களுக்கு இரண்டு மூன்று அறைகள் கிடைத்திருந்தன. அதைக் காட்டிலும் அதிகமான இடம் அங்கே அவர்களுடைய வாசத்துக்குத் தேவையாகவும் இல்லை. வாசற் பக்கமிருந்த திறந்த வெளியில் அழகழகான புஷ்பச் செடிகள் வைத்து வளர்க்கப்பட்டிருந்தன. இடம் பார்ப்பதற்கு மிகவும் ரமணீயமாக இருந்தது. அக்கம் பக்கத்திலும் எத்தனையோ பெரிய பெரிய பங்களாக்கள் இருந்தன. பட்டணத்திலிருந்து ஜனங்கள் காற்றாட அந்தப் பக்கம் உலாவ வருவார்கள்; திரும்பும் பொழுது அவர்களுடைய முகத்தில் உல்லாசம் தாண்டவமாடும். ஆனால் ரத்தனுக்கு அந்த இடத்தைக் கண்டாலே கட்டோடு பிடிக்கவில்லை. ஏனென்றால் வியாதியஸ்தர்கள் படும் வேதனையைக் காட்டிலும் அவர்களுடன் கூட இருப்பவர்களுக்குத் தானே வேதனை அதிகம்!

பிரயாணக் களைப்பினால் வக்கீலுக்கு உடம்பு இன்னும் படுமோசமாகி விட்டது. இரண்டு மூன்று நாட்கள் மிகவும் கவலைக்கிடமாகக்கூட இருந்தது. ஆனால் மருந்து கொடுக்க ஆரம்பித்ததும் கொஞ்சம்கொஞ்சமாகக் குணமடைந்து வந்தது. ரத்தன் விடியற் காலையிலிருந்து நள்ளிரவு வரை அவருக்கு அருகிலேயே ஒரு நாற்காலியைப் போட்டுக் கொண்டு உட்கார்ந்திருப்பான். அவனுக்குக் 'குளிக்க வேண்டும், சாப்பிட வேண்டும்' என்ற சிந்தனைகூட இராது. வக்கீலுக்கோ அவன் அங்கிருந்து நகர்ந்தால், 'நன்றாக இருமித் தன் தொண்டையைச் சரி செய்து கொள்ளலாமே' என்று தோன்றும். அவனுக்கு ஆறுதல் அளிக்கும் பொருட்டு, அவர் தன் இருமலைச் சிரமப்பட்டு அடக்கிக் கொள்ளுவார்; தன் உண்மை நிலைமையை மறைப்பார். என்றைக்காவது ரத்தன், 'இன்று உங்களுக்கு உடம்பு எப்படியிருக்கிறது?' என்று கேட்டால், அவர் ஒரு வரட்டுச் சிரிப்புச் சிரித்துக் கொண்டு, 'முன்னைக்கு இப்பொழுது எவ்வளவோ தேவலை' என்று பதில் அளிப்பார். அவர் இரவு பூராவும் தூக்கம் வராமல் படுக்கையில் புரண்டு புரண்டு படுத்துப் பொழுதைப் போக்கியிருப்பார். ஆனால் ரத்தன் 'நேற்று இரவு தூங்கினீர்களா?' என்று கேட்டால் 'நன்றாகத் தூங்கினேனே!' என்றுதான் பதில் சொல்லுவார். ரத்தன் பத்தியமான ஆகாரத்தைக் கொண்டு வந்து அவருக்கு முன்னிலையில் வைப்பான். அவருக்கு அதைக் கண்டாலே வாந்தி எடுக்க வரும். இருந்தாலும் ரத்தனுடைய மனதைப் புண்படுத்தக் கூடாது என்பதற்காகக் கசப்பு மருந்தை விழுங்குவதுபோல அதைச் சாப்பிட்டு வைப்பார். ரத்தனும் அவருடைய உடம்பு குணமடைந்து கொண்டு வருகிறது என்று எண்ணுவான். அந்தச் செய்தியை வைத்தியருக்கும் சொல்லுவான். வைத்தியர் தன் மருந்து நன்றாக வேலை செய்கிறதாக்கும் என்று எண்ணி மனம் பூரித்துப் போவார்!

ஒரு நாள் வக்கீல் ரத்தனைப் பார்த்து, "ஆமாம், நீ செய்யும் சிசுருஷையைப் பார்த்தால், எனக்கு உடம்பு குணமாகி நான் அல்லவா உனக்குச் சிசுருஷை செய்ய வேண்டி வந்துவிடும்போலிருக்கிறது!" என்று வேடிக்கையாகக் கேட்டார்.

ரத்தன் மிகுந்த மகிழ்ச்சியுடன், "அப்படி வந்தால்தான் நல்லதாயிற்றே! நானும் அப்படி ஆகவேண்டும் என்று தான் கடவுளைப் பிரார்த்தித்துக் கொண்டிருக்கிறேன்!" என்றான்.

"உனக்கும் வியாதியாகப் படுத்துக் கொள்ள வேண்டும் என்று ஆசையாக இருந்தால் எனக்குக் குணமான பிறகு படுத்துக்கொள். இப்பொழுதே வேண்டாம். சொல்லுவதைக் கேள். தினசரி சாயந்திர வேளையிலாவது கொஞ்ச தூரம் வெளியே போய்விட்டு வா. வீணாக உடம்பைக் கெடுத்துக் கொள்ளாதே!"

"எங்கே போகிறது? எனக்கு எங்கேயாவது வெளியே போகப் பிடித்தால் தானே? வீட்டை விட்டு நகருவது



"என்ன ஸார்! கங்கா ஸ்நானம் ஆச்சா?"
"இல்லையே ஸார்! என் மனைவி இன்னும் புடவை பொறுக்கி வாங்கவில்லையே!"

என்றாலே எனக்குக் கொஞ்சங்கூடப் பிடிக்கவில்லை!"

வக்கீலுக்குத் திடீரென்று ரமாகாந்தின் நினைவு வந்தது. "இந்த ஊரில் உள்ள பார்க்குகளையெல்லாம் சற்றுச் சுற்றிப் பாரேன்! ஒருவேளை ரமாகாந்த பாபு தென்பட்டாலும் தென்படுவார்!" என்றார்.

இதைக் கேட்டதும் ரத்தனுக்குத் தான் பத்மாவுக்கு அளித்திருந்த வாக்கு நினைவு வந்தது. 'ரமாகாந்தைத் தேடிக் கண்டு பிடித்து விடலாம்' என்ற நம்பிக்கை அவனுடைய மனதுக்கு மகிழ்ச்சியை அளித்தது. அவர் எங்கேயாவது 'பார்க்'கில் உட்கார்ந்து கண்களுக்குத் தென்பட்டு விட்டால், 'என் பாபுஜி, இனிமேல் எப்படி ஓடுவீர்கள்? உங்களை ஓடவிட்டால் தானே?' என்று கேட்போம் என்று மனதில் கற்பனை செய்து கொண்டான். அந்தக் கற்பனையின் காரணமாக அவனுடைய முகம் தாமரைப் புஷ்பம்போல மலர்ந்தது. ஆகவே, அவன் "நான் கூடப் பத்மாவுக்கு அவரைத் தேடுவதாக வாக்களித்திருந்தேன். ஆனால் இங்கே வந்ததும் அந்த விஷயம் மறந்தே போய்விட்டது!" என்றான்.

வக்கீல் பிடிவாதத்துடன், "இன்று போய்விட்டு வாயேன்! என்னைக் கேட்டால் தினம் ஒரு மணி நேரம் போய் வர வேண்டும் என்றுகூடச் சொல்லுவேன்" என்றார்.

ரத்தன் மிகவும் கவலை தோய்ந்த குரலில், "எனக்கு உங்களைத் தனியாக விட்டு விட்டுப் போவதென்றாலே என்னவோ மாதிரியிருக்கிறது" என்றான்.

"என்னைப் பற்றி இன்னும் ஏன் கவலைப் படுகிறாய்? என் உடம்புதான் நாளுக்கு நாள் குணமடைந்துகொண்டு வருகிறதே!" என்று லேசாகச் சிரித்துக் கொண்டே வக்கீல் சொன்னார்.

ரத்தன், "அப்படியானால் சரி; போய்ப் பார்த்து வருகிறேன்" என்று ஒத்துக் கொண்டான்.

ரத்தனுக்கு இரண்டொரு தினங்களாக வக்கீலின் சொற்களில் நம்பிக்கை ஏற்பட வில்லை. வரவரச் சந்தேகம்தான் வலுத்தது. அவருடைய உடல் நிலைமையைக் கவனித்துப் பார்க்கும்பொழுது, உடம்பு குணமடைந்து வருவதற்கான அறிகுறி எதுவுமே தென்படவில்லை. குணமடைந்து வருவதாயிருந்தால் அவருடைய முகம் இப்படி நாளுக்கு நாள் சோகை தட்டி வெளுத்துப் போவானேன்? கண்கள் குழி விழுந்து போவானேன்?

* * * * * * * * * * *

## யுக்தி பலிக்கவில்லை!



ராஜாஜி சென்னை மாகாணப் பிரதம மந்திரியாக இருந்தபோது, ஒரு பிரபல வியாபாரி தம்முடைய சொந்த அலுவலாக அவரைச் சந்தித்துப் பேச விரும்பினார். ஆனால், ராஜாஜி அதற்கு இணங்கவில்லை. கடைசியில், அந்த வியாபாரிக்கு ஒரு யுக்தி தோன்றியது. ராஜாஜி ஏதோ வேலையாக ஒரு நாள் இரவு சென்ட்ரல் ஸ்டேஷனில் இரண்டாம் வகுப்பு வண்டியில் பிரயாணம் செய்யப் போகிறார் என்ற தகவல் அவருக்குக் கிடைத்தது. உடனே, அவர் தாமும் ஒரு இரண்டாம் வகுப்பு டிக்கட் வாங்கிக் கொண்டு போய், ராஜாஜிக்கு 'ரிசர்வ்' செய்யப்பட்டிருந்த 'ஸீட்'டுக்கு எதிர் 'ஸீட்'டில் உட்கார்ந்தார். வண்டி புறப்பட ஆரம்பித்ததும், அவர் ராஜாஜியிடம் தம்முடைய விண்ணப்பத்தைக் கூற ஆரம்பித்தார். ராஜாஜியின் நிலைமை சங்கடமாகிவிட்டது. வியாபாரியிடமிருந்து எப்படித் தப்பிக்கலாம் என்று யோசித்தார். வண்டி அடுத்த ஸ்டேஷனில் நின்றதும், ராஜாஜி இறங்கிப் போய், காலியாக இருந்த ஒரு முதல் வகுப்பு வண்டியைத் தமக்காக 'ரிஸர்வ்' செய்து, அதில் ஏறிக் கொண்டார்.

பாவம், வியாபாரி ஏமாந்து போனார்! அவருடைய யுக்தி பலிக்கவில்லை!

* * * * * * * * * * *

உடல் உருகி உருக் குலைவானேன்? வேலைக்காரனிடமும் சமையற்காரனிடமும் இதைப் பற்றிச் சொல்லுவது அவனுக்கு உசிதமாகப் படவில்லை. வைத்தியரிடம் கேட்கலாம் என்றாலும் அவனுக்குச் சங்கோசமாயிருந்தது. 'எங்கேயாவது ரமாகாந்த பாபு அகப்பட்டு விட்டால் அவரைக் கேட்கலாம். இத்தனை நாட்களாக அவர் இவரைப் பார்க்கவில்லை. அடிக்கடி பார்ப்பவர்களுக்கு அவ்வளவாகச் 'சட்'டென்று வித்தியாசம் தெரியாது. வெகு நாட்களாகப் பார்க்காதவர்கள் பார்த்தால் வித்தியாசம் தெரிந்து 'சட்'டென்று சொல்லி விடுவார்கள். ரமாகாந்த பாபு அகப்பட்டால் இன்னொரு சௌகரியமும் உண்டு. அவர் மூலமாக, இந்த ஊரில் உள்ள யாராவது ஒரு நல்ல டாக்டரை அழைத்து வந்து காட்டலாம்' என்ற எண்ணம் அவன் மனத்தில் எழுந்தது. ஆகையால் 'ரமாகாந்த பாபு எங்கேயாவது நம் கண்களுக்குத் தட்டுப்பட மாட்டாரா?' என்ற நோக்கத்துடன் அவன் வெளியே புறப்பட்டான். (தொடரும்)

# காலக்ஷேபம்

## நல்ல கேள்வி!

வந்தவர்:—என்ன கடைக்காரரே, போன மாசம் வந்த பருப்பு இருக்கிறதா?

கடைக்காரர்:—வேண்டிய மூட்டைகள் இருக்கின்றன. எத்தனை படி வேண்டும்?

வந்தவர்:—சரி, சரி: அதெல்லாம் ஆன பிறகு வருகிறேன்.



## யார் பைத்தியம்?

பைத்தியக்கார ஆஸ்பத்திரியிலிருந்து ஒரு பைத்தியக்காரன் ஓடி விட்டான். ஆஸ்பத்திரி சூப்பரின்டெண்டு அவனைத் தேடிக் கொண்டு வந்தார்.

சூப்பரின்டெண்டு (வழிப்போக்கன் ஒருவனிடம்):—இந்த வழியாக ஒரு பைத்தியக்காரன் ஓடிவந்தானா?

வழிப்போக்கன்:—அவன் எப்படியிருப்பான்?

சூப்பரின்டெண்டு:—அவன் குட்டையாயிருப்பான்; மிகவும் ஒல்லியாயிருப்பான்: 350 பவுண்டு எடையிருப்பான்......

வழிப்போக்கன் (ஆச்சரியத்துடன்):—என்ன, குட்டையாகவும் ஒல்லியாகவும் இருந்து கொண்டு ஒருவன் எப்படி 350 பவுண்டு எடை கனமாயிருக்க முடியும்?

சூப்பரின்டெண்டு (கோபத்துடன்):—நான் தான் அவன் பைத்தியக்காரன் என்று சொன்னேனே!



## நிஜந்தான்!

"இன்றைக்கு ஒரு குருட்டுப் பிச்சைக்காரன் என்னிடம் வந்து, 'அம்மா, உன்னைப் பார்த்தால் மகாலக்ஷ்மி மாதிரி யிருக்கே, ஒரு அணா கொடு!' என்று கேட்டான். அவனுக்கு என் முகம் எப்படித் தெரிந்திருக்கும்? குருடன் என்கிறது பொய்தானே?"

"இல்லை! நிஜமாகவே அவன் குருடனாயிருந்ததனால்தான் உன்னை அப்படிச் சொல்லியிருக்கிறான்!"



## தெரியவே தெரியாது!

வித்தைக்காரன் (கூட்டத்திலிருந்து ஒரு பையனை யழைத்து):—டேய், பையா! என்னை உனக்கு இதற்கு முந்தி தெரியாதே? நீ என்னைப் பார்த்ததில்லையே? எல்லா ஜனங்களையும் பார்த்து நிஜத்தைச் சொல்லு.

பையன்:—தெரியவே தெரியாது. உன்னைப் பார்த்ததுகூட இல்லை, அப்பா!

## பேஷான யோசனை!

பிரிட்டிஷ் ஆபீஸர் (புதிதாய் வேலைக்கு வந்தவர் சார்ஜண்டைப் பார்த்து):—நல்ல குதிரை ஒன்று கிடைக்குமா?

சார்ஜண்ட்:—இதற்கு முன்னால் நீங்கள் சவாரி செய்திருக்கிறீர்களா?

ஆபீஸர்:—இல்லை: இனிமேல்தான் கற்றுக் கொள்ள வேண்டும்.

சார்ஜண்ட்:—ரொம்ப நல்லது. என்னிடம் ஒரு குதிரை யிருக்கிறது. அதன் மேல் இதுவரை யாரும் சவாரி செய்ததில்லை. நீங்கள் அந்தக் குதிரைமேல் ஏறிச் சவாரி செய்யக் கற்றுக் கொள்ளலாம்.



## முதல் நாவல்

"இதுதான் உமது முதல் நாவலா?"

"ஆமாம், ஸார்! என் இருபது வருஷ உழைப்பு இந்த நாவலில் அடங்கி யிருக்கிறது!"

"என்ன ஆச்சரியம்! இந்த நாவலை யெழுத இருபது வருஷம் ஆயிற்று?"

"இல்லை, இல்லை! இந்த நாவலை யெழுத எனக்குச் சரியாக மூன்று மாதம்தான் ஆயிற்று. ஆனால் மீதியுள்ள பத்தொன்பது வருஷம் ஒன்பது மாதங்களும் இதைப் பிரசுரிக்க ஒரு பிரசுரகர்த்தரைத் தேடி அலைவதில் கழிந்தன!"



## ரொம்ப சரி!

வந்தவர் (வேலைக்காரனைப் பார்த்து):—ஏன் அப்பா! உள்ளே போய் உன் எஜமானரைப் பார்க்கணும். இந்த நாய் இப்படிக் குரைக்கிறதே, எப்படிப் போவது?

வேலைக்காரன்:—நீங்க பயப்படாமப் போங்க! எஜமானே நாய்க் கடி வைத்தியத்திலே பேர் போனவராச்சுங்களே!



## விஷயம் தெரிந்தவர்!

ஒரு சங்கீத வித்வான் ஒரு பிரபுவிடம் பாடிப் பரிசு பெறச் சென்றார்.

பிரபு:—உங்களுக்குப் 'பல்லவி' பாடத் தெரியுமா?

வித்வான் (கோபத்துடன்):—என்னை ஒன்றுந் தெரியாதவன் என்று நீங்கள் நினைத்து விட்டீர்களா? எனக்குப் பல்லவி, அநுபல்லவி, சரணம் எல்லாம் பாடத் தெரியும்.





# அம்பிப் பயல் சமர்த்து!

ரா. ரா.

"மயிலாப்பூரில் ஏதோ ஒரு கடையில் காப்பிப் பொடி கொடுக்கிறார்களாம். எழுந்திருக்கலேன்! உங்களைத்தானே?" என்று சொல்லிக் கொண்டே படுக்கைத் தலைமாட்டில் வந்து நின்றாள் என் மனைவி.

"அப்பா! இந்த வீட்டில் கொஞ்ச நாழி கூட நிம்மதி கிடையாது. காலையில் எழுந்திருந்து பன்னிரண்டு மணி வரை ரேஷன் கடைகளுக்குச் சென்று கால் கடுக்க 'க்யூ'வில் நிற்பதில் உள்ள சிரமம் எனக்கல்லவா தெரியும்? கொஞ்ச நாழி படுத்து 'ரெஸ்ட்' எடுத்துக் கொள்ளலாம் என்றால் மயிலாப்பூர் போக வேண்டுமாம். அவஸ்தைப்பட்டு 'க்யூ'வில் நின்றுவந்து காப்பிப் பொடி வாங்கிச் சாப்பிட வேண்டும் என்று யார் அடிக்கிறார்கள்? இன்றைக்குக் காப்பி வேண்டாம். 'டீ' போட்டுக் கொண்டு வா!" என்று அதிகார தோரணையில் ஒரு சத்தம் போட்டேன்.

அவள் வாயை மூடிக்கொண்டு சமையல் அறைப் பக்கம் சென்று விட்டாள். நான் சொன்ன வார்த்தைகளுக்குப் பன்மடங்கு வார்த்தைகளில் பதில் சொல்லும் என் சகதர்மிணி, வாயை மூடிக்கொண்டு பேசாமல் போனது எனக்கே ஆச்சரியத்தை அளித்தது. மறுபடியும் படுக்கையில் படுத்தேன். கொஞ்ச நாழி கழித்து அவளாகவே 'டீ' கொண்டு வருவாள் என்ற தீர்மானத்துடன் கண்ணை மூடிக் கொண்டேன். ஒரு தூக்கம் தூங்கி எழுந்ததும் கண்ணைக் கசக்கி விட்டுக்கொண்டு சுற்றும் முற்றும் பார்த்தேன். அவள் அங்கு இருப்பதாக எனக்குப் படவே இல்லை. "இதேதடா! எங்காவது கோபித்துக் கொண்டு போய் விட்டாளோ?" என்று எண்ணி, சமையல் கட்டுக்குள் நுழைந்தேன். அங்கும் அவள் இல்லை. ஆனால் அடுப்பங்கரையில் ஒரு டம்ளரில் 'டீ' கொட்டி வைக்கப்பட்டிருந்தது. அதை எடுத்து அப்படியே மடக் படக் என்று ஊற்றிக்கொண்டேன்.

வெளியே வந்து அம்பிப் பயலை வீட்டைப் பார்த்துக்கொள்ளும்படி சொல்லிவிட்டு, காப்பிப் பொடிக்காக உடல் பொருள் — மிஞ்சினால் உயிரைக் கூடத் தியாகம் செய்யத் தீர்மானித்து, துண்டை உதறிப் போட்டுக் கொண்டு வெளியே கிளம்பினேன். எனக்குச் சகுனம் சரியாக இல்லை. ஆனால் 'காசு பணம் கொடுக்கப் போகிறோம், காப்பிப் பொடி கிடைக்காமலா போகப் போகிறது?' என்ற அசட்டுத் தைரியத்துடன் அதை லக்ஷியம் செய்யாது, பஸ் ஸ்டாண்டுக்கு வந்து சேர்ந்தேன். இரண்டு பஸ்கள் தவறிவிட்டன. மூன்றாவது பஸ்ஸில் ஒரு மூலையில் இடம் கிடைத்தது. நான் செய்த பாக்கியத்தை உள்ளூற வியந்து கொண்டேன். மயிலாப்பூரும் வந்தது. அங்கே அந்தக் கடையைக் கண்டு பிடிப்பதில் எனக்குச் சிரமமே ஏற்படவில்லை. நாலு பர்லாங் நீளத்தில் நின்று கொண்டிருந்த 'க்யூ' காப்பிப் பொடி கிடைக்கும் இடம் இதுதான் என்று சொல்லாமலே விளக்கிவிட்டது. பத்து வயதுக்கு மேற்பட்ட சின்னஞ் சிறு பையன்கள் அவ்வளவு பேரும் அங்கே ஆஜராகி இருந்தார்கள். ஒவ்வொருவருக்கும் கால் பவுண்டு பொடியல்லவா கிடைக்கும், அந்தக் 'க்யூ'வில் நின்றால்? அடாடா! நான் எவ்வளவு துரதிர்ஷ்டசாலி! அம்பிப் பயலை அழைத்து வந்திருந்தால் அவனையும் அந்தக் 'க்யூ'வில் நிற்கவைத்துக் கால் பவுண்டு அவனுக்கும் வாங்கலாமல்லவா? உள்ளூற நொந்து கொண்டேன் என் மடத்தனத்தை!

அப்போது சரியாக எட்டு மணி. பக்கத்தில் நின்ற ஒருவரிடம் ரகசிய பாஷையில், "இன்று பொடி கிடைக்குமா, ஸார், நமக்கு?" என்றேன். எனக்கு உள்ளூற 'ஸ்டாக்' தீர்ந்துவிடுமோ என்று பயம்.

சரியாக ஒன்பது மணிக்குக் கடைக்காரர் முக்கால்வாசிப் பேருக்குக் கொடுத்துவிட்டு,

"மற்றவர்களுக்கு நாளை கொடுக்கப்படும்" என்று பறையறைந்துவிட்டுக் கதவைப் பூட்டிக் கொண்டார். நான்கு மணி நேரம் 'க்யூ'வில் நின்றதால் ஏற்பட்ட கால்வலி, காப்பிப்பொடி கிடைக்காததால் ஏற்பட்ட அவமானம் இரண்டும் ஒன்று சேரவே, கடை முதலாளியை ஒரு 'சஹஸ்ரநாமம்' அர்ச்சனை செய்தேன். பிறகு, பஸ் ஸ்டாண்டுக்கு நடையைக் கட்டினேன். 'கடைசி பஸ்' என்னை விட்டு மாயமாய் மறைந்து விட்டது. கடைசியில் ஒரு ரிக்ஷா வைத்துக் கொண்டு சரியாகப் பத்து மணிக்கு வீடு வந்து சேர்ந்தேன்.

என் மனைவி நான் கொண்டு வந்த பையை ஆராய்ந்து விட்டுச் சாதம் பரிமாறுவதற்காக என் பின்னால் வந்தாள். அவளிடம், "இன்று காப்பிப் பொடி ஸ்டாக் தீர்ந்து விட்டதாம், நாளைக்குக் கிடைக்கும், அவசியம் வாங்கிவருகிறேன். போகவரப் பத்தணா செலவழிந்ததுதான் மிச்சம்!" என்றேன்.

நான் எதிர்பார்த்தபடி அவள் முகத்தில் கடுகடுப்புக்குப் பதிலாகப் புன்னகை மலர்ந்திருந்தது எனக்கு வியப்பு அளித்தது.

"போகட்டும்; நல்ல வேளையாக உங்களையே நம்பி இருந்து விடாமல் தம்பியையும் அனுப்பினேனே? அப்பாவைக் காட்டிலும் பிள்ளை சமர்த்து!" என்றாள்.

காப்பிப் பொடி விற்கும் இன்னொரு கடைக்கு தம்பியை அனுப்பி யிருந்தாள் என்றும், அவன் என்னைப்போல் வெறுங்கையாக வராமல் காப்பிப் பொடியுடன் வந்தான் என்றும் தெரிந்து கொண்டேன்.

"நம்ப அம்பிப் பயல் சமர்த்துத்தான்; சந்தேகம் என்ன?" என்று குழந்தையின் முதுகில் தட்டிக் கொடுத்தேன்.

"தம்மிற் தம்மக்கள் அறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லாம் இனிது"

என்று வள்ளுவர் பெருமான் கூறியது பொய்யாமொழி யல்லவா?

---

## அதுவே தேவலை!



# குழந்தைகளின் ஈரல் குலைக்கட்டிகளுக்கு இன்றியமையாத மருந்து!



குழந்தைகளின் ஈரல் குலைக் கட்டிகளை குணப்படுத்தும் ஜம்மியின் லிவர்க்யூர் வைத்திய சாஸ்த்திரத்திற்கே அவசியமானதும் பெருமை அளிக்கக் கூடியதாகவும் இருக்கிறது.

இந்த அற்புத நிவாரணியால், முற்றிப் போய் கைவிடப்பட்ட ஈரல் குலைக்கட்டி வியாதிகளும் ஆச்சரியகரமான முறையில் குணப்படுத்தப் பட்டிருக்கிறது என்று இந்தியாவில் உள்ள பிரக்யாதி பெற்ற பல டாக்டர்களால் பாராட்டப்பட்டுள்ளது.




## ஜம்மியின் லிவர்க்யூர்

எங்கும் கிடைக்கும்.

**ஜம்மி வெங்கடரமணய்யா அன் ஸன்ஸ்**

மைலாபூர், மதராஸ் (போன் நெ. 8139).

தெப்பகுளம், திருச்சிராப்பள்ளி. பெரிய தெரு, கும்பகோணம். பெங்களூர். பம்பாய் 4. (போன் நெ. 41593) மற்றும்: லக்னௌ. கல்கத்தா.



Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamalle High Road, Kilpauk, Madras.





No 5.

REGD. No. M. 4392

License No. 18
Licensed to post without prepayment




FAS

# ராஜா ஸ்னோ,
## ஹேர் ஆயில், கஸ்தூரி ஸோப்.

**MANYAM & CO., MADRAS, BANGALORE, BOMBAY.**

[illegible] 112, [illegible] இலங்கைக்கு [illegible]:
[illegible] 93, [illegible] தெரு, கொழும்பு